ஓம்.

பரப்ரம்மணேநமஃ.

# திருமந்திரவிசாரணை.

(செந்திநாதையர் துர்வாதமறுப்பு.)

## AN EXAMINATION OF THIRUMANTHIRAM.

இஃது

"ஆரியன்"

என்பவரால் எழுதப்பட்டு,

சென்னை:

மதராசு ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1897ஹு

செப்டம்பர்மீ.

ஏவிளம்பி ஹு

ஆவணிமீ.

இதன்விலை அணு 4.

# இந்நூலினுள்ள விஷயங்கள்.



---

# இந்நூலுக்குப் பிரமாணமாக எடுத்துக்காட்டிய நூல்கள்.

சூதசங்கிதை.
திருமந்திரம்.
கூர்மபுராணம்.
சங்கர சங்கிதை.
அத்தியாத்துமோபநிஷத்.
இலிங்கபுராணம்.
சிவபுராணம்.
திருவாசகம்.
சுந்தரமூர்த்திசுவாமிகள் தேவாரம்.
திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்.
வாயு சங்கிதை.
வராகோபநிஷத்.
சிவரகசியம் ரிபுகீதை.

ஓம்.

பரப்ரம்மணே நம:.

# திருமந்திர விசாரணை.

## பீடிகை.

சிதம்பரத்தில் தற்போதிராநின்ற. ம-ா-ா ஸ்ரீ கோப்பாய் சபாபதி நாவல ரவர்கள், "பரசமய கோளரி" என்னும் பேர் வைத்துக் கொண்டு, முன்னர்த் தம்மாற் பிரசுரிக்கப்பட்டு வந்த தமது "ஞானாமிர்தம்" என்னும் பத்திரிகையின்கண், நந்தன ஆனிமீ கூஉ (1892 ஜூலைமீ 12உ) சஞ்சிகையில் "கேவலாத்துவித விசாரம்" என்ற விஷயத்தின் கீழ் அத்துவித விரோதமாக ஓர் விஷயம் வரைந்தனர். அதற்கு "அத்வைத சித்தாந்தி" என்பார்: "வேதாந்த சங்கை நிவாரணம்" என்று நாம மஹித்துச் சிதம்பரம் "ப்ர்ம்மவித்தியா"வில் சமாதானம் எழுதிப் பூர்த்திசெய்தார். அது 1893 வருஷத்தில் தனிப் புத்தக வடிவமாய் வெளிவந்திருக்கின்றது. அதைப்பற்றி அவரேனும் அவரைச் சார்ந்த இன்னும் எவரேனும் பதில் பேசாது வாய் பூட்டிட்டுக் கொண்டன ரென்பது எவரும் அறிந்த விஷயமேயாம். இஃதிங்ஙனமாக, அவரைச் சார்ந்த ம-ா-ா-ஸ்ரீ யாழ்ப்பாணம் செந்திநாதைய ரென்பாரொருவர் அது விஷயமாக வாதிட வெளிவந்தார். வெளி வந்தவர் அந்நூலைப்பற்றி யேனும் பேசினாரின்று. ஆனால் அதில் காட்டப்பட்ட பிரமாணச் செய்யுள்களில் ஒன்றைப் பற்றி மாத்திரம் பேசி அது தம்மவர்க் குரிய நூலென வாது செய்கின்றார். அவ்விஷயம் நாகையிற் பிரசுரமாகும் "நாகை நீல லோசனி" என்னும் பத்திரிகையின்கண் 1896 டிசம்பர்மீ 28உ, 1897 ஜனவரிமீ 4உ, 11உ, 18உ களில் வெளி வந்தது. அதற்கு அவரிட்ட பேர் "இலக் கறியாது திருடப்பட்ட சொத்தை மீட்டுக் கோடல்" என்பது. அவ்விஷய முற்றுந் தவறென்பது இனிவரும் அதன் மறுப்பினா லறியலாம்.

## பொய், மெய்யை மறைத்தல்.

ஷை சபாபதி நாவல ரவர்கள் பேசிய விஷயங்களில் "பொய், மெய்யாய பரப்பிரமத்தை மறைத்து அங்ஙனம் விவகரிக்கச் செய்ய வல்ல தாதல் யாங்ஙனம்?" என்ப தொன்று. அதற்கு முன் அவர் எழுதிய சம்பந்தப்படி அதன் பொருள் பொய்யாகிய மாயை, மெய்யாகிய பிரமத்தை யெப்படி மறைக்கும்? என்பது. இதனால் பொய், மெய்யை மறைக்கா தென்பது அவருடைய நியாயம். இதற்கு மறுப்பெழுதிய 'அத்வைத சித்தாந்தி' பொய் மெய்யை மறைக்கு மென்றதற்குக் கயிற்றரவு, கானனீர், தாணு புருஷன், மரம் யானை

வாகன முதலிய திருட்டாந்தங்களைச் சொல்லி, அதற் குவமேயமாகப் பொய்யான மாயை, மெய்யான பிரமத்தை மறைக்கு மென்று சொல்ல எழுந்து,

### சூதசங்கீதை கால அளவை.

நீளஆன்மா(பிரமம்)வினுண்மையைமறைத்துநிற்றலினுற்றமமென்றும்
வாளவிர்வித்தையென்னு ஞானத்தைமறைத்தலினவித்தையேயென்றும்
கோளுறஞ்ஞானகாரணமாகிக்குலவலின்மோகமேஎன்று
மாளுறுசத்துவிலட்சணமாகியமைதலினலசத்தென்றும். (௨௦)

உலகுதித்திடற்குக்காரணமாகியுறைதலிற்காரணமென்றும்
இலகுகாரியமாகியவுலகாகியிருக்கவுந்தெரிதரப்படாத
வலமுறுதலினவ்வியத்தமேயென்றும்வகுப்பரம்மாயைக்குப்பெயர்க
ணிலவணிபெருமான்றன்வலியாற்கற்பித்தநிர்நிரம்பியகாலம். (௨௧)

இச்செய்யுளையும், இதற்கிணைய

### வேதாந்த சூளாமணி.

சீவசேதனமறைத்துத்தமமயலாகியவுலகத்திறத்திற்கெல்லாம்
மேவுகாரணமாகிமாயைவிபரிதஞானம்விளைத்துமோக
மோவவுணர்வழித்தவித்தைசத்தின்வேறாகிப்பொய்யுருவியாகும். (௨௦)

இச்செய்யுளையுங் காட்டி, இதற்கொத் திருக்கிறதெனத்

### திருமந்திரம் பாரவத்தை.

மரத்தை மறைத்தது மாமதயானை
மரத்தில் மறைந்தது மாமதயானை
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதல் பூதமே. (௨௨)

இத் திருமந்திரச் செய்யுளையுங் காட்டினார். இதனால் சப்பபதி நாவலர் தெரியாமையினால் வலிய வந்து வாதந் தொடுத்துச் செய்த ஆதங்கைக்குச் சமாதானம் வந்து விட்டதெனல் திண்ணமாயிற் றென்க.

அது நிற்க; இப்போது ஷை செந்திநாதைய ரென்பார், அத்வைத சித்தாந்தியார் காட்டிய 'மரத்தை மறைத்தது மாமத யானை' என்ற செய்யு ளொன்றனைப் பற்றி மாத்திரம் பேச வெழுந்து, அச் செய்யுள் தம்மவர்க் குரிய நூலிலுள்ள தாதலால், அதை அத்வைதிகள் எடுக்கப்படா தென்றும், அவ்வா றெடுத்தது திருடியதா மென்றும், அதினும் இலக்கறியாது திருடியதா மென்றும், ஆதலால் அதை மீட்டுக் கொள்ளுகின்றோ மென்றுஞ் சொல்லி, சில விஷயங்கள் எழுதினர். எழுதியவர், தலைச் சாத்துக் கியைந்த வாறு எழுதித் தம் பக்ஷத்தைத் தாபித்துக் கொண்டா ரின்று. அது அத்துவிதிகளுக்கே யுரிய தென்றும், இலக்கறியாது திருடியதாகச் சொல்வது தவ றென்றும் காட்டிக் கொண்டு, அது தமது சொத்தெனத் தாபித்துக் கொள்ளாமலும் மீட்டுக் கொள்ளாமலும் போவதோடு அத்

திருமந்திரத்தை அத்துவிதிகளிடத்தில் ஒப்பிவித்தும் விட்டு, ஐயர் வெறுங் கையராய்ப் போகின்றார். அவ்விஷயத்தினை இங் கெடுத்துக் காட்டுவாம். இவர் எழுதும் விஷயங்களில் இவர்க் கேதும் அனுகூல மில்லாமற் போனாலும் அவ்விஷயத்திற்குப் பெயர் கொடுத்தது மாத்திரம் மிகு வெற்றிபோல் காணப்படும். அது இவர தியற்கையே. உள் நுழைந்து விஷயங்களை வாசித்து அதன் பொருளை அறிய விரகில்லாதார், தலைச்சாத்தையேனும் வாசித்து ஐயரது சைவம் வெற்றியடைந்ததாக மனப் பால் அருந்தட்டுமென அவ்வா றெழுதுகின்றார். இதுதான் பூர்வ பக்ஷியார்க்கு இலாபம்; இதைவிட இலாபம் அவர்க்கு ஒன்று மின்று.

பொய், மெய்யை மறைக்கா தென்று கூறி, இந்தத் தூர் நியாயத்தைக் கொண்டு பொய்யான மாயை மெய்யான பிரமத்தை மறைக்கா தென்று சபாபதி நாவலர் கூறினார். அதற்கு 'அத்வைத சித்தாந்தி' அவ்வாறு மறைக்கு மெனக் கயிற்றரவு முதலிய உவமானங்களைக் கூறி, உவமேயத்திற்குச் சூத சங்கிதைப் பிரமாணத்தையுங் காட்டினார். அதைப் பற்றிப் பூர்வ பக்ஷியார் யாது பேசினார்? கயிற்றரவு முதலிய உவமானங்களை இவர் அங்கீகரிக்கின்றனரா? இல்லையா? மெய்யான பிரமத்தைப் பொய்யான மாயை மறைக்கு மென்று சொல்லும் சூத சங்கிதையைப் பற்றி இவர் ஒன்றும் பேசாது மௌன முறுவ தென்ன காரணம்? மெய்யைப் பொய் மறைக்கா தென்றுவது, அதன்படியே அரவு கயிற்றை மறைக்க வில்லை யென்றுவது, இவ் வுவமானப்படி பிரமத்தை மாயை மறைக்க வில்லை யென்றுவது பேசா திருப்பதை யோசிக்கின், இவ் விஷயத்தில் சபாபதி நாவலர் மதத்திற்கு இவர் விரோதியாயும், 'அத்வைத சித்தாந்தி' யின் மதத்திற்கு அவிரோதி யாயும் ஆகின்றா ரென்ப தாம். இஃதுண்மையாயின், சுருதி யுக்தி அனுபவ சம்மதமுள்ள இவ்விஷயத்திற்கு விரோத மாய்த் திருமந்திர மிருக்கிற தென்று சொல்லி, இவர் தமது நூலென்று சொல்வதை விட்டு, அதனை அப்பிரமாண நூலெனக் கொள்ள வேண்டுமே. 'மரத்தை மறைத்தது மாமத யானை' என்ற செய்யுளில் பொய்யான யானை மெய்யான மரத்தை மறைத்த தென்பது இவர்க் குடன் பாடா? அன்றா? இவர் யானையைப் பொய் யென்கிறாரா? மெய் யென்கிறாரா? 'அத்வைத சித்தாந்தி' பொய்யென்று சாதித்தார்; இவர் மெய்யென்று சாதிக்கிறாரா? மரம் காரணம், யானை காரியம். காரியம் பொய்யெனத் 'தத்துவ வாத'த்தில் "உலகம் சத்தா? அசத்தா?" என்ற விஷயத்தில் தாபிதமா யிருக்கிறதே. அதற்கு இவர் என்ன சொன்னார்? என்ன சொல்லுகிறார்? சுருதியாதிகளும் காரியம் பொய் யென்று சொல்வதாய்ப் பிரஸ்தாபத்தி லிருக்கும் 'வேதாந்த சங்கை நிவாரணம்' என்ற நூலில் 7, 8, 9, 10 - வது பக்கங்களிலும் 'துவிதாத் துவித வாதம்' 87, 88, 89 - வது பக்கங்களிலும் இன்னும் மற்றப் பல துவிதசைவ

கண்டன நூல்களிலும் அநேக பிரமாணங்கள் காட்டப் பட்டிருக் கின்றனவே. அந்தப் பிரமாணங்களை இவர் அங்கீகரிக்கின்றனரா? இல்லையா? பிரமாணங்களை அங்கீகரிக்கமாட்டா ரென்னின் 'தத்துவ வாத'த்தின்படி யுக்தி அனுபவங்கட் காவது கட்டுப்பட்டுப் பேசட்டும். எந்த வழிக்கும் வராமல் வெறும் வாயை மென்று கொண்டு திரு மந்திரத்தை எமது நூலெனச் சொல்வது என்னே? திருமந்திர நூலார் காரியம் மெய்யென்று சொல்லுகிறவராயின், மரத்தை யானை மறைத்த தென்று சொல்லமாட்டார். குதிரையை யானை மறைத்தது, பூனையை மாடு மறைத்தது, எலியைப் பூனை மறைத்தது என இவ்வாறு சத்தைச் சத்து மறைத்த தென்று சொல்லுவார். அவ்வாறு சொல்லாமல் மரத்தை யானை வாகனம் மறைத்த தென்று சொன்னமையின் சத்தை அசத்து மறைத்த தென்று சொன்னவ ரானார். பொய் யான யானை மெய் யான மரத்தை மறைத்த தென்று எப்போது சொன்னாரோ அப்போதே திரு மூல நாயனார் காரியம் சத் தென்று சொல்லும் துவித மதத்தைச் சங்கரிப்பவ ரானார். இத தகைய துவித மத சங்காரியை இப் பூர்வ பக்ஷியார் தமது மதஸ்த ரெனக் கொள்வது நெருப்பை மடியில் கட்டிக் கொள்வது போலா மென்க. இவர் சூத சங்கிதையை விட்டுத் திரு மந்திரத்தை மாத்திரம் திருடியதாகச் சொல்வதால் சூத சங்கிதை இவருடைய நூலல்லவென்றும், வேதாந்திகளுடைய நூலென்றும், திருமந்திரம் வேதாந்திகளுடைய நூலல்ல வென்றும், இவருடைய நூலென்றும் ஏற்படு கின்றன. மேற்படி திரு மந்திரத்தை வேதாந்திகள் எடுத்துக் காட்டுவது பற்றி அத்வைதிகள் இலக்கறியாது திருடுகிறவர்களானால், அத்வைதிகளுடைய நூலாகிய சூத சங்கிதையை இவர் பல விடங்களில் எடுத்துக்காட்டி யிருப்பதுபற்றி இவரும் இலக் கறியாது திருடிய திருட ராவாரே. இவர், தம்மை இலக்கறியாது திருடிய திருடரென் று காட்டிக் கொள்ளும் பொருட்டுத்தான் பிறரை அவ்வாறு கூறினர் போலும்! இவ்வமயத்தில்,

> "தன்குற்றம்நீக்கிப்பிறர்குற்றங்காண்கிற்பின்
> என்குற்றமாகுமிறைக்கு"

என்னுந் திருக் குறளின் பொருளை யறியாது போனமைக்கு விசனமுறுகின்றோம்! சூதசங்கிதையானது பதினெண் புராணங்களிலொன்றான ஸ்காந்தத்தின் ஓர் சங்கிதை; ஆதலால் சூத சங்கிதை புராணமாயிற்று.

சூதசங்கிதை புராணவரலாறு.

ஆரணமுழுதுமுணர்ந்தவேதியனேயாயினும்சிவபுராணத்தி
னோரணிபொருளையுணர்ந்திலனுயினிலங்குமவ்வேதமற்றவனைத்
தாரணியிடத்துநம்மைவஞ்சிப்போன்றுனிவனெனநனியஞ்சும்
பூரணமுறவாதலின்மறைப்பொருளைப்புராணத்தாறறெரிதரல்வேண்டும். (௬அ)

அறையுமென்றூற்குமறைபிரதானமாகியபெரும்பிரமாணம்
பொறைதருமிருதிபுராணங்களுபபுராணமற்றுள்ளசாத்திரங்க
ணிறைதருமஃதற்குவிரோதமாகாதுநிகழ்த்திமெனுகுணமாகி
யுறைதருமஃதற்குவிரோதமாநூல்களொருவற்கும்பயன்படாதனவே. (௬௬)

கூர்மபுராணம் திருக்கலியாணம்.

வேதநூல்களவற்றின்வழிவிராட்டாஞ்சுவாயம்பூமனுமன்
னேதுநூல்கள்வியாதமுனியுரைத்தநூல்களவற்றின்வழி
நீதிலருமாமறைக்கிழவர்செப்புநூல்களனைத்துமே
நீதிநூல்களிவற்றின்வழிநின்றோர்நெறியினின்றோரே. (௬௨)

அங்கமாறுமறைநான்குமீமாங்கியுமென்றருள்கொழித்துத்
தங்குநீதிநூலொன்றுபுராணமொன்றுதவறெறிந்து
பொங்குதருமநூலொன்றுபுகன்றவீரேழ்விஞ்சையினை
அங்கணுலகீன்றவனளித்தானிவற்றையுணர்ந்தோரறிவுடையோர். (௬௩)

மகாஸ்காந்தம் சங்கரசங்கிதை சிவரகசியகண்டம்
சம்பவகாண்டம் 2 ம் அத்தியாயம் மொழிபெயர்ப்பு.

"அப்போது மகாப் பிரபுவாகிய பரம சிவன், கம்பிரவாக்கினால் சொன்ன தாவது:—வாரீர் விஷ்ணு பிரமர்களே! நீங்களிருவரும் உலகில் துவாபர யுகந் தோறும் வியாசராகவும் மனுவாகவும் அவதரித்து வேதசாஸ்திரங்க ளிரண்டையும் கலியுகத்தின்கண் அறிவீனர்களாயுள்ள மானிடர்கள் எளிதாய்க்கற்றறியும்படி, பலவாறுயிருக்கிற அவைகளைச் சுருக்கமாய்ச் செய்து விடுவீர்கள். (வியாசர் செய்தது வேதாந்த சூத்திரமும் புராணங்களும், மநுசெய்தது மநுஸ்மிருதியுமாம். (௧அ,௧௬)

"பிராமணர்களுக்குத் தகுதியுள்ளவை சைவபுராணங்களேயாகும். ஆகிலும் ஸ்காந்த புராணம் கேளீர்முனிவர்களே! சுகத்தைக் கொடுப்பதும் மேன்மையுள்ளதுமா யிருக்கிறது; சகல வேதாந்த சாரங்களையும் நன்கு விளக்கியது.

இந்தப் பிரமாணங்களினால் புராணத்தினால் மறைப் பொருளை உணர வேண்டுமென்றும், மறைக்குவிரோதமில்லாததுபுராணமென்றும், அது பதினான்கு வித்தைக் குட்பட்டதென்றும், கலியுகத்தில் மானிடர் எளிதாய் அறியுமாறு புராணங்களைச் சுருக்கிச் செய்யும்படி பரம சிவன் விஷ்ணுவுக்குத் திருவாய் மலர்ந்தருளினாரென்றும் ஏற்படுகின்றன வன்றோ? இத்தகைய புராணத்தினை அத்துவிதிகளுக்குச் சொந்தமாக்கிவிட்டு, பதினான்குவித்தையில் சேராது பிறப்பட்ட ஓர் தனி நூலைத் தம்பக்கத்து நூலெனக் கொண்டதனால் பூர்வபக்ஷியார் வேத புராணாதிகளின் பாஹியரெனல் திண்ணம்.

'அத்வைத சித்தாந்தி' ஷை 'வேதாந்த சங்கைநிவாரண'த்தில் திருமந்திரத்தினின்றும் 'மரத்தை மறைத்தது மாமத யானை' என்ற செய்யுளோடு இன்னும் இருபத்தேழு செய்யுள்களையும் காட்டினார். இவ்வையர் 'மரத்தை மறைத்தது' என்ற செய்யுளை மாத்திரம் இலக்கறியாதுதிருடியதாகச் சொன்னதுபோல மற்றஇருபத்தேழையுஞ் சொன்னாரில்லை. மற்ற இருபத்தேழும் இவர் பக்ஷத்தார்க்குச்

சொந்தமானால் அவைகளையுந் திருடியதாகச் சொல்லலாமே. இதனால் ஐயர் பக்ஷப்படி ஷை இருபத் தேழு செய்யுள்கள் அத்வைதிகளுக் குரியன வென்றும், ஒரு செய்யுள் மாத்திரம் இவர் பக்ஷத்தார்க் குரிய தென்றும் ஆகின்றன. மேலே காட்டிய காரண காரியங்களின்படி மெய்மை பொய்மைகளினாலும், 'அத்வைத சித்தாந்தி' காட்டிய உவமானங்களினாலும், சூத சங்கிதையின் பிரமாணத்தினாலும், இனி வரும் விஷயத்தினாலும் ஷை ஒரு செய்யுளும் அத்வைதிளுக்கே யுரிய தென்றும், அவர்கள் தங்கள் சொத்தையே தாங்கள் வைத்துக்கொண் டிருக்கிறார்களென்றும், பிறர் சொத்தைத் தங்கள் சொத் தென்று சொல்ல வில்லை யென்றும் நிச்சய மாகின்றன வென்க. ஷை இருபத் தேழு செய்யுள்களைப் பற்றிப் பூர்வபக்ஷி ஏன் பேசவில்லை யென்னின் 'மரத்தை மறைத்தது மாமத யானை' என்ற செய்யுள் விஷயமாய்ச் செய்த குழப்பமும், மற்றவற்றிற் செய்ய முடியாமையா னென்க. 'மரத்தை மறைத்தது' என்ற செய்யுளிலும், 'மரத்தை மறைத்தது மாமத யானை, மரத்தில் மறைந்தது மாமதயானை' என்ற இவ்விரண் டடியி லாவது, மற்ற இரண் டடியிலும் 'பரத்தை' என்ற சொல் போக மற்றவற்றிலுமாவது குழப்பஞ் செய்யவில்லை. அந்தப் 'பரத்தை' என்ற வொரு சொல்லிற்றான் இவரது குழப்பமெல்லாம்.

ஷை 'வேதாந்த சங்கை நிவாரண'த்தில் துவித விரோதமாகவும், அத்துவித சாதகமாகவும் வராகோபநிஷத், சர்வசாரோபநிஷத், கைவல்லியோபநிஷத், மைத்திரேயோபநிஷத், நிராலம்போபநிஷத், ஆத்மபோதோபநிஷத், நாரத பரிவிராஜ கோபநிஷத், முண்டகோபநிஷத், அமிர்த பிந்துபநிஷத், ஸ்கந்தோபநிஷத், பைங்களோபநிஷத், சூத சங்கிதை, சூதசங்கிதையில் சாந்தோக்கி யோபநிஷத், ஷை ஐதரேயோபநிஷத், ஷை கடவல்லியுபநிஷத், ஷை கேனோபநிஷத், ஷை பிரகதாரணி யோபநிஷத், கூர்ம புராணம், அதில் ஈசுவர கீதை, இலிங்க புராணம், வாயு சங்கிதை, காசி காண்டம், திருவிளையாடற் புராணம், சிவ ரகசிய ரிபு கீதை, இராமாயணம், பாரதம், அதி உத்தர கீதை முதலிய சதுர்தச வித்தைகட் குட்பட்ட பிரமாணங்களையும், தேவாராதிப் பிரமாணங்களையும் ஷை 'அத்துவித சித்தாந்தி' எடுத்துக் காட்டினாரே, அவற்றை யெல்லாம் இலக் கறியாது திருடிய தாக ஏன் சொல்ல வில்லை? சொல்லாமையினால் அந் நூல்கள் அத்வைதிகளுக் குரியன வென்றும், அவர்கட் குரியனவா யிருக்கின்றமையின் அவைகளைத் தங்கள் சொத்தாக வைத்துக் கொள்ளுகின்றார்களென்றும், பிறர் சொத்தை அபகரிக்க வில்லை யென்றும் சித்தாந்தமாவதோடு, அந் நூல்கள் இவர்க்கும் இவர் சமயிகளுக்கும் சொந்தமாகா வென்றும், சொந்த மென்று எடுப்பார்களே யாயின் அவைகளைத் திருடியவர்களாவார்க ளென்றும், அதிலும் இலக் கறியாது திருடிய திருடர்களாவார்க ளென்றும் சித்தாந்த மாகு மல்லவா?

அங்ஙனமாயின் இவரை வேதப் புறச்சமயியென்று சொல்வதற்குத் தடையென்னை ? நாம் சொல்ல வேண்டுவதில்லை. வேத புராணாதிகளை யெல்லாம் விட்டு எப்போது திருமந்திரத்தை மாத்திரம், அதிலும் 'பரத்தை மறைத்தது' என்ற செய்யுளை மாத்திரம், அதிலும் 'பரத்தை மறைத்தது' என்ற இரண்டடியை மாத்திரம், அதிலும் 'பரத்தை' என்ற சொல்லை மாத்திரம் எடுத்து அதற்கு எப்போது தப்புப் பொருள் கூறினரோ, அப்போதே இவர் வேதப் புறச்சமயி யாவதில் ஒரு சிறிதும் ஐய மின்றாம்.

## துவம்பத தற்பத அசிபதங்கள்.

திருமந்திரத்தி லுள்ள "ஆறந்தம்" என்ற தலைப்பின்கீழுள்ள 'வேதாந்த தொம்பத மேவும் பசு வென்ப" என்ற செய்யுளின் முதலடியைக் காட்டி, ஞாதுரு ஜீவான்மா வென்றும், அது "வேதத்தின் அந்தத்திலே பேசப்படும் பசுவாகிய துவம்பத உயிராமெனவும்" என்றும் பேசினர். அதன் மேல் "ஞான மென்பது தற்பதத்தினாலே பேசப்படும் பரையாகிய பரமாம் எனவும், சிவம் என்பது அசி பதத்தினாலே சொல்லப்படும் சிவனும் என்றும் ஈண்டு (ஞானபாத மல்லாத பராவஸ்தை கூறும் யோக பாதத்திலே) கொள்ளற்பாற்றும். ரௌரவாகமத்திலே சாக்கிர சாக்கிரம், சாக்கிர சொப்பனம், சாக்கிர சுழுத்தி, சாக்கிர துரியம், காலபரம், அதீதம், பரதரிசனம், விசுவக்கிராசம், உபசாந்தம், சிவதரிசனம், சாயுச்சிய மென அவாந்தர பராவஸ்தா பேதங்கள் பேசப் படுவன வாம். இந்த ரௌரவாகமப் பராவஸ்தையை யுற்று இறுதிச் சாயுச்சியம் ஒழித்து நின்ற சாக்கிர சாக்கிர முதல் சிவதரிசன மீறா யுள்ள பத்தையும் பத்தவத்தையா மென்று கொண்டு திருமூல நாயனார், 'ஈரைந் தவத்தை யிசைமுத் துரியத்து' என்றும்,

'தொந்தத்தசியையவ்வாசியிற்றேற்றியே
யந்தமுறையீரைந்தாகமதித்திட்டு
வந்தமிலாதவவத்தையவ்வாக்கியத்
துந்துமுறையிற்சிவமுன்வைத்தோதிடே'

என்றுந் தொகைப்படுத்திக் கூறினர்." என்று கூறினர்.

இவர் வேதாந்தத்தில் தற்பத அசிபதங்கள் சொல்லவில்லை யென்றும், துவம்பத மாத்திரஞ் சொல்லி யிருக்கிற தென்றுஞ் சொல்ல வந்து, 'வேதாந்த தொம்பத மேவும் பசுவென்ப' என்ற செய்யுளைக் காட்டினர். உடனே ஆகமத்திலே அதிலும் ரௌரவாகமத்திலே தற்பத அசி பதங்கள் சொல்லி யிருப்பதுபோல எடுத்துக் காட்ட வந்தார். ஆனால் இவர் அதிர்ஷ்டம்போல் அதில் அகப்படவில்லை போலும்; அதனால் சாக்கிர சாக்கிரமுதல் சிவதரிசன மீறாயுள்ள பத்தவஸ்தையைப் பற்றி மாத்திரம் பேசினர். அதனோடு அதற் கியைந்த சில திருமந்திரச் செய்யுள்களையுங் காட்டினர்.

இதனால் வேதாந்தத்தில் துவம்பதத்தைப் பற்றி மாத்திரம்அதாவது ஜீவனைப்பற்றி மாத்திரம் சொல்லி யிருக்கிற தென்றும், ஆகமத்தில் தற்பத அசிபதங்களைப் பற்றிச் சொல்லா விடினும் சிவனைப் பற்றிச் சொல்லி யிருக்கிற தென்றும் பூர்வ பக்ஷியார் அபிப்பிராயப்படி விளங்குகின்றன. ஆகமத்திற் சொல்லி யிருக்கிறபடி திரு மந்திரத்தி லுஞ் சொல்லி யிருப்பதாய் இவர் சொல்லுகின்றமையின் திருமந்தி ரம் ஆகம பக்ஷ நூலாகின்றது; அதோடு திரு மந்திரத்தை யிவரது நூலென்றுஞ் சொல்வதால் இவர் ஆகமஸ்த ராகின்றார். வேதத்தில் சிவனைப் பற்றிச் சொல்லாமல் பசுவைப்பற்றி மாத்திரம் சொல்வ தாய் இவர் சொல்லுகின்றமையின் வேதம் வேதாந்திகளது நூலா கின்றது.

இதன் பின்னர்ச் சுகரகசியம், சர்வசாரமுதலிய உபநிடதங்கள் ஏகான்ம உபநிடதங்களென்றும், அவ்வுபநிடதங்களிலே "தூலப்பிர கிருதி ராசச சாத்துவிக குணப் பாலராய்த் துவம்பத தற்பதங்களி னால் உரைக்கப் படும் காரிய காரணோபாதிய ராம் சீவேசு வரரை யொழித்துக் கடந்து அசி யென்னும் பதத்தால் ஒருமையுற அறிய ப்படும் பிரத்தியக்ஷப் பிரகாசித ஆன்மாவே பிரமம் என்று அறியப் படும்" என்றுங் கூறினார். அதன் பிறகு "அடிப் புறத்து மாயாவா தோப நிஷதங்களில் ஸ்தூலப் பிரகிருதி சுத்தா சுத்த சாத்துவிக ராசச குணப் பிரதிபிம்ப மித்தை யாம் சீவேசுரருக்கு மேலாய்ப் பிரம மெனப் பட்டு, சாங்கிய யோகோப நிடதங்களினும் தலைமை வாய்ந்த வைதிக பாசுபத யோக அதர்வசிகை முதலிய உபநிஷதங் களிலே, ஞாதுருவாய் (ஆன்மாவாகிய சீவப் பிரமமாய்) நிற்ப தன் றிப் பரப் பிரமத்துக்கு முன்னே தானும் பரப்பிரம மென்று நிற்ற லாகுமோ ஓர் போதும் ஆகாது ஆகாது." என்றுங் கூறினார். அதன் பேரில் வைதிக சைவ பாசுபத் விளக்கம் சுவேதாசுவத ரோபநிஷ த்திகளிலே சுருக்க முற நிகழ்வதே யாகச் சீவேசுவர மாயா வாத விசாரத்தினால் சேஷிக்கும் பிரமம் (ஆன்மா) பல சாங்கிய யோகோ பநிடதங்களிலே பெரிதும் முடிவாய்ப் பேசப் படுகின்றமையா லன் றோ லிங்க புராணமும் சைவ புராணமும், 'சைவஞ் சங்க்ஷிப்ய வே தோக்தம்' சைவஞ்சுருக்கமுற வேதத்திற் சொல்லப்பட்டது என்ற கருத்தை யறிந்து, சாங்கிய யோகோபநிடதங்களை வேதாந்த மென் றும், அதிலே பிரதி பாதிக்கப்பட்ட பிரமத்தை (ஆன்மாவை) ஞாதிரு என்றும், அதனைத் துவம் பதத்தினாலே சுட்டிய பசு என் றுங் கொண்டு, 'வேதாந்த தொம்பதமேவும் பசு என்ப' என்றருளிச் செய்தார்" என்றுங் கூறினார்.

திருமந்திரக்காரர் வேதாந்தம் தொம்பதமான பசுவைப் பற்றி மாத்திரம் சொல்லி யிருப்பதாகச் சொன்னார். அப்படியே பின்ன ரும் சாங்கிய யோகோபநிடதங்கள் சீவான்மாவைப் பற்றிமாத்திரம்

பேசுவதாய்ச் சொல்லி, அங்கும் ஷை திருமந்திரச் செய்யுளைக் காட்டினார், பிறகு ஆகமம் தற்பத அசிபதங்களைப் பற்றிக் கூறுவதாய்ச் சூசிப்பித்தார். இப்படிச் சொன்ன விவரே: புத்தி பிரமை கொண்டு முன் பின் முரணாக "உயிரும் (ஆன்மாவும்) பரமும் சிவனும் அதர்வசிகை முடிவு கொண்டு, துவம்பத தற்பத அசிபதங்களில் வைத்து உணரற்பாலனவாம் என்ற கருத்தால்" என்று கூறி,

"உயிரைப்பரனையுயர்சிவன்றன்னை
அயர்வற்றறிதொந்தத்தசியுதன்ற்
செயலற்றறிவாகியுஞ்சென்றடங்கி
யயர்வற்றவேதாந்தசித்தாந்தமாமே"

என்ற செய்யுளையுங் காட்டினார். ஷை வாக்கியத்தினால் அதர்வசிகையாகிய வேதத்திலும் துவம்பதம், தற்பதம், அசிபதம் ஆகிய முப்பதங்களைப் பற்றிச் சொல்லுகிறதாக ஏற்படுவதோடு திருமூலரது ஷை 'உயிரை' என்ற செய்யுளிலும் ஷை முப்பதத்தைப் பற்றிச் சொல்வது வேதாந்த சித்தாந்த மென் றேற்படுகின்றது. முன்பு வேதத்தைக் குறைகூற வெண்ணி, வேதத்தில் தொம்பதத்தைப்பற்றி மாத்திரம் சொல்லுகிற தென்றும், ஆகமத்தில் தற்பத அசிபதங்களைப்பற்றியுஞ் சொல்லுகிறதென்றும், திருமந்திரம் ஆகம பக்ஷ மென்றுஞ் சொல்லி, ஆகமபக்ஷமான திருமந்திரத்தைத் தம் பக்ஷமாக்கி, வேதத்தை வேதாந்திகள் பக்ஷ மாக்கினார். இதனால் இவர் தாந்திரிகரும், வேதாந்திகள் வைதிகரு மாவதோடு, வேதாந்தத்தை யிகழ்கின்றமையின் இவர் அவைதிக தாந்திரிகரு மாகின்றார்.

'வைதிக சைவ பதி பசு பாச விளக்கம் சுவேதாசுவதரோபநிஷதாதிகளிலே சுருக்கமுற நிகழ்வதேயாக' என்ற வாக்கியத்தால் துவம்பதத்திற்கு மேலே தற்பதத்தை வேதாந்த உபநிஷத் சொல்லுவதாய் இவர் காட்டினாலும் விரிவாய்ச் சொல்ல வில்லை யென்றும் சுருக்கமாய்ச் சொல்லுகிற தென்றும் ஏற்படுகின்றன. எப்படி யானாலும் சுருக்கமாக வேனும் உபநிஷத் சொல்லுகிற தென்று இவரே இவ்விடத்தில் ஒப்புக்கொள்ளுகின்றார். சுருக்கமாக வானாலுஞ் சொல்லுகின்ற தென்ற விவர்: வேதாந்தம் துவம்பதத்தை மாத்திரஞ் சொல்லுகிற தென்று முன்னே சொன்னது நியாயமாமோ? அவ்வாறு சுருக்கமுறச் சொல்லுகிற தென்று சொல்வதும் பொய்யே; எவ்வளவு சொல்ல வேண்டுமோ அவ்வளவும் சொல்லியே யிருக்கின்றது; அதிலும் உபமான உபமேயங்களோடு விரிவாயும் சொல்லி யிருக்கின்றது.

'வேதாந்தம் தொம்பத மேவும் பசு வென்ப' என்ற வாக்கியத்தைக் காட்டி ஜீவான்மாவைப் பற்றி மாத்திரங் கூறுகின்ற தென்றதால் வேதாந்தத்தில் தற்பத அசிபதங்களான ஈச சிவனைப் பற்றிச் சொல்ல வில்லை யென் றாகின்றது. அப்படி யானால் வேதாந்தத்தில் மோக்ஷத்தைப் பற்றியுஞ் சொல்ல வில்லை யென்றாகும். இதனால் இவ

ரது தெரியாமை விளங்குகின்றதே யன்றித் திருமந்திரத்தில் ஏதும் குறை வில்லை. இப்போ திவர் திருமந்திரப்பிரமாணத்தின் மீது நின்று பேசுவதால் அதைக் கொண்டே வேதாந்தத்தில் ஈச சிவனைப்பற்றியும் பேசுகிறதென்பதற்கும், முத்தியைப்பற்றியும் பேசுகிறதென்பதற்கும் அத் திரு மந்திரத்தைக் கொண்டே பிரமாணங் காட்டுகின்றோம்.

திருமந்திரம் வேதச்சிறப்பு.

வேதத்தைவிட்டஅறமில்லைவேதத்தின்
ஓதத்தகுமறமெல்லாமுளதர்க்க
வாதத்தைவிட்டுமதிஞர்வளமுற்ற
வேதத்தையோதியேவீடுபெற்றார்களே. (௧)

திருநெறியாவதுசித்தசித்தன்றிப்
பெருநெறியாயபிரானைநினைந்து
குருநெறியாஞ்சிவமாநெறிகூடும்
ஒருநெறியொன்றாகவேதாந்தமோதுமே. (௨)

ஷை உபதேசம்.

சோம்பரிருப்பதுசுத்தவெளியிலே
சோம்பர்கிடப்பதுசுத்தவெளியிலே
சோம்பருணர்வுசுருதிமுடிந்திடம்
சோம்பர்கண்டார்அச்சுருதிக்கண் தூக்கமே. (௧௬)

ஷை அந்தணரொழுக்கம்.

வேதாந்தங்கேட்கவிருப்பொடுமுப்பதப்
போதாந்தமானபிரணவத்துள்புக்கு
நாதாந்தவேதாந்தபோதாந்தநாதனை
ஈதாமெனுதுகண்டின்புறுவோர்களே. (௨)

வேதாந்தங்கேட்டவிரும்பியவேதியர்
வேதாந்தங்கேட்டுந்தம்வேட்கையொழிந்திலர்
வேதாந்தமாவதுவேட்கையொழிந்திடம்
வேதாந்தங்கேட்டவர்வேட்கைவிட்டாரே. (௬)

திருநெறியாகியசித்தசித்தின்றிக்
குருநெறியாலேகுருபதஞ்சேர்ந்து
கருமநியமாதிகைவிட்டுக்காணுந்
துரியச்சமாதியாந்தூய்மறையோர்க்கே. (௯)

வேதாந்தஞானம்விளங்கிவிதியிலோர்
நாதாந்தபோதநணுகியபோகந்துப்
போதாந்தமாம்பரன்பாற்புகப்புக்கால்
நாதாந்தமுத்தியுஞ்சித்தியுநண்ணுமே. (௧௨)

ஷை நியமம்.

ஆதியைவேதத்தினபபொருளாளனை ஈசச்
சோதியையங்கேசுடுகின்றவங்கியைப்
பாதியுண்மன்னும்பராசத்தியோடுடன்
நீதியுணர்ந்தநியமத்தனுமே. (௧)

ஷை மகாவாக்கியம்.

நீயதுவானாயெனநின்றபேருரை
யாயதுநானானேனென்னச்சமைந்தறச்
சேயசிவமாக்குஞ்சீர்நந்திபேரருள்.
ஆயதுவாயனந்தானந்தியாகுமே. (க)

இச்செய்யுள்களினால் வேதத்தால் வீடு பெற்றார்களென்றும், வேதாந்தத்தால் சிவ நெறி கூடுமென்றும், வேதாந்த நிலையில் நனவிற் சுழுத்தி நிலை வருமென்றும், வேதாந்தத்தைச் சிரவணஞ் செய்தவர் பந்த விளைவிற் கேதுவான ஆசையை விட்டு விட்டார்களென்றும், மறையோர்க்குத் துரிய சமாதி நிலை யுண்டாமென்றும், வேதாந்த ஞானம் விளங்கிடுவோர்க்குச் சித்தி முத்திகள் கிடைக்குமென்றும், சாம வேதத்தின் முடிவாகிய தத்துவமசி மகாவாக்கியத்தின் துவம் பத தற்பதங்களின் மேலாகிய அசிபதத்தினால் சிவமாந்தன்மை பெற்று ஆநந்த பதத்தைப் பெறுவரென்றும் சித்தாந்த மாகின்றன.

மாயாவாத உபநிடதமென் றொன்றிவர் கண்டு பிடித்தமைக்குப் பிரமாணம் யாது? மாயா வாத மின்ன தெனவும், அதனை யுடையார் இன்னாரெனவும் இன்னும் இவர்க்குத் தெரியாதோ! "துவித சைவரே மாயா வாதிகள்" என்ற நூலினாலும், இவருக்கு மறுப்பாயெழுந்த துவித சைவ மறுப்பில் "அத்வைதிகளே மாயா சகித வாதிகளும், த்வைதிகளே மாயா சகித வாதிகளும்" என்ற விஷயத்தினாலும் இவரே மாயா வாதியென் றேற்பட்டிருக்க, அதனை யுணராதுபோலப் பகட்டொழுக்கம் பூண்டு "இந்தப் பூனையும் பால் குடிக்குமா?" எனத் தந்திர வேஷம் கொண் டொழுகுவது நல்லொழுக்க முடையார்க்கு ஒழுங்காகுமோ! உலகிற்கு மாயையை முதற் காரணஞ் சொல்வனவும், மாயையை மெய்யெனக் கொள்வனவும், மோக்ஷத்தில் மாயையால் துவிதப்பட்ட பேதஞ் சொல்வனவுமான உபநிடதங்களன்றோ மாயா வாத உபநிடதங்கள்? அப்படிப்பட்ட உபநிடதங்கள் நூற்றெட்டில் ஒன்றேனு மின்றே. இவர் கூறும் சித்தாந்தம் சுருதி யுக்தி அனுபவ மாறான அவைதிக தாந்திரிக பாசுபத மாயா வாத துவித துர்வாத பாஷண்டிகள் கூற்றன்றோ? இப்படிப் பட்ட வேதப் புறச் சமயிகட்கு வேத மென்பதேது? உபநிஷத்துகளென்பதேது? நூற்றெட்டு உபநிஷத்துகளெல்லாம் மாயையைப் பொய் யென்று தள்ளி, உலகிற்குப் பிரமத்தையே முதற் காரண மென்று சொல்வனவும், முத்தியில் துவிதத்தைத் தொம்சம் செய்வனவுமா மன்றோ? இவரது மாயாவாதத் தன்மையை, மாயையைத் தலை காட்டாது ஓடச் செய்யும் மாயாரகித உபநிஷத்துகளின் மேலேற்றுவது பொருளல்லவற்றைப் பொருளெனக்கொள்ளும் மாயா மயக்க மருட்சியே யாம்.

இதுநிற்க; ஏகான்ம உபநிடத மென்பது உண்மையே அதன் பொருள் ஏக ஜீவான்மா வன்று, ஏகக் கடவுள், அல்லது ஏக சிவன்,

அல்லது ஏக பிரமம், அல்லது ஏகபரமாத்துமா வென்பதாம். அதை யொப்பாத பிறர் பலகடவுள் வாதியும், அனேகேசுவரவாதியு மாவர். இவ்விஷயம் "சித்தாந்திகளும் ஏகாத்தும வாதிகளே" என்ற நூலில் விரிவாய்ப் பேசப்பட்டு இவரது அஞ்ஞானக் கொள்கையை மறுத் திருந்தும் பின்னும் பின்னும் அதில் மறுக்கப்பட்ட பூர்வ பக்கத் தினையே பேசுவது நன்றாமோ? இவ்விரண்டு விஷயங்களைப் பற்றிப் 'பேதவாத திரஸ்கார'த்திலும் பேசப்பட் டிருக்கிறது.

## அத்தியாத்துமோபநிஷத்.

"மகா பிரளய சமுத்திரம்போல் பரிபூரணமாய்த் தேஜஸில் இருள்போல ப்பிராந்திக்குக்காரணமான அஞ்ஞானமானது எவ்விடத்தில் இலயமாகிறதோ, அப்படிப்பட்ட அத்துவய ப்ரம்ம பரதத்துவமாயும், விசேஷ மற்றதாயு மிருக்கிற சிதாத்துமாவிடத்தில் பேத மேது? ஏகாத்துமாவாகிய பரதத்துவத்தில் அந்தப் பேதம் எப்படி யிருக்கக் கூடும்?......................................

நான சங்கமற்றவன், அடையாள மில்லாதவன், நான்ஹரி, நான் சாந்தி யடைந்திருக்கிறவன், நான்முடிவற்றவன், பூரணமானவன், பழமையானவன், நான் கருத்தாவல்ல, போத்தாவல்ல, நான் விகாரமற்றவன், நான் அழிவற்ற வன், நான் சுத்த ஞானஸ்வரூபி, நான் மாத்திரமுள்ளவன், எப்போதும் மங் களஸ்வரூபி."

இந்தபிரமாணத்தினால்பிரமம் ஏகாத்துமாவென்னும்பெயரைப் பெற்றிருக்கிற தென்பது உண்மையா மென்க. தம் மதம் பல யீன முள்ள தென்றும், பிரமாண மற்ற தென்றும், அதினும் சுருதியாதி களின் பிரமாண மற்ற தென்றும் ஆக ஆக, அது சகியாமல் மான மேலிட்டு, இனிச்சுருதியாதிகளை யெல்லாம் இகழ்ந்து ஒன்றுமில்லா மல் செய்துவிடுவதே சரியெனத்துணிந்து, வாயில் வந்தவாறு பேசி யும் கையில் வந்தவாறு எழுதியும் வருகின்றார். இவ்வாறு வட தேச த்தில் சிலர் வேத வேதாந்தங்களை யெல்லாந் தூஷித்து அவற்றி னுக்கு விரோதமான கற்பித மதத்தை எழுதிப் பிசுரப் படுத்தின தாகவும், அம்மதந்தான் இப்போது இங்கு வந்திருக்கும் கிறிஸ்து மகம்மதீய மதங்களாய்ப் பிரிந்ததாகவும் வடசேத்துச் சரித்திரத்தில் எழுதி யிருக்கின்றார்கள். அதுபோல இவ் வையரும் வேத வேதாந் தாதிகளை யெல்லாம் குறைகூறித் தூஷிக்க வாரம்பித்தார் போலும். இதன்மேல் இன்னொன்றைப் பற்றிச்சிந்திப்பாம்.

'அவ்வுபநிடதங்களிலே சீவேசுவர்களை யொழித்துக் கடந்து அசி யென்னும் பதத்தால் ஒருமை யுற அறியப் படும்' என்றும், 'சாத்துவிகராசச்குணப்பிரதிபிம்பமித்தையாம்சீவேசுரருக்கு' என் றுங் கூறுகின்றார். இவ்வையர் உபநிஷத்துகளை நிந்தித்துஅவைகளுக் குப் பாஹியராய்ப் போனாலும் திருமந்திரத்தைக் கொஞ்சங் கையில் பிடித்துக் கொண்டிருப்பதால், அதும் அவர் கையினின்றும் விலக, அத்திருமந்திரத்தையே இவர்க்குப் பிரமாணமாகக் காட்டுவாம்.

திருமந்திரம் காரியகாரணோபாதி.

காரியமேழிற்கலக்குங்கடும்பசு
காரணமேழிற்கலக்கும்பரசிவன்
காரியகாரணங்கற்பனைசொற்பதப்
பாரறும்பாழில்பராபரத்தரனே. (ரு)

இச் செய்யுளால் காரிய காரணோபாதி ரகித மான பராபரத்தினிடத்துக் காரியகாரணோபாதி சகிதமான ஜீவேசர் கற்பனை யென்பதினிது விளங்குகின்றது. வேத விரோதியானதால் உபநிஷத் தென்றால் இவர்க்கு எட்டிக்காயும் வேப்பங்காயுமா யிருக்கிறது ; திருமந்திர மென்றால் பாலும் கற்கண்டும்போல் விருக்கின்றது. அத்திருமந்திரமே ஜீவேசுவரக் கற்பனையென்று சொல்லிவிட்டதே! இனியாது செய்வரோ! இனித் திருமந்திரத்தையு மிழந்துவிட்டு எதைக் கைப்பற்றுவரோ ! 'சாங்கிய யோகோப நிட தங்களினும் தலைமை வாய்ந்த வைதிக பசுபத யோக அதர்வசிகை முதலிய உபநிடதங்களிலே' என்றதில் இருவிதக் குற்றங்களுக்கு இரையானார். சாங்கியயோகோபநிடதங்களென வொன் றில்லா திருக்க அவ்வித உபநிடதங்க ளிருக்கின்றனவெனக் கூறிய தொரு குற்றம்; (இதற்கு மறுப்புப் 'பேதவாத திரஸ்காரம்' 48, 49, 50, 51, 52, 53, 54 வது பக்கங்களிற் காண்க.) அவற்றினுக்கு அதர்வசிகை முதலிய உபநிடதங்கள் தலைமை வாய்ந்த தென்ப தொரு குற்றம். உபநிடங்க ளெல்லாம் ஒரே கருத்தாயும் ஒரே சித்தாந்தமாயும் முடிவன வன்றி இரண்டு பட்ட சித்தாந்த மாத லின்று. எவ்வித வுபநிஷத்துகளும் பிரமம் ஒன்றே மெய்யென்றும், அது நீக்க மற வெங்கும் நிறைந்திருப்பதால் மற்றப் பொருளெல்லாம் போலி யென்றும் சொல்லுகின்றன. இந்த நிச்சயம் பொதுவா யிருப்பதால் எல்லா வுபநிஷத்துகளும் ஒரே அபிப்பிராய முடையன வாம். அங்ஙன மாக இவ்வையர் பேதங் கண்டது துவித மதப் பிராந்தியேயாம்!

'அதர்வசிகை முதலிய உபநிஷதங்களிலே' ஞாதுருவாய் (ஆன்மாவாகிய சிவப் பிரமமாய்) நிற்பதன்றிப் பரப்பிரமத்துக்கு முன்னே தானும் பரப்பிரம மென்று நிற்றலாகுமோ ஓர் போதும் ஆகாது ஆகாது' என்றார். ஜீவப்பிரமமாய்என்றபித்துமொழி, 'பேதவாத திரஸ்கார'த்தில் மறுக்கப் பட்டது. பிரமம் ஒன்றே சத்திய மென்றும், அது பரிபூரண மென்றும், இரண்டு பொருள் ஒரு இடத்தி லிராதென்ற நியாயப் பிரமாணத்தின்படி எங்கும் பரிபூரணமாய் நீக்கமின்றி நிறைந்த அப்பிரமப் பொருளின்கண் சத்தியமாய்ப் பிறிது பொரு ளிராதென்றும், போலியா யிருக்கலாமென்றும் எத்தனையோ முறை இவருக்கும் இவர் பக்கத்தினர்க்கும் சுருதி முதலிய பிரமாணங்களைக் காட்டியதோடு யுக்தி அனுபவசகிதமாயுங் கிளிப் பிள்ளைக்குச் சொல்வதுபோலச் சொல்லி யிருக்கின்றமையின், அதை யனுசரித்தே யிப்போதும் சத்தாகிய பிரம சந்நிதானத்தின்கண் சத்துப்

போலியாய் ஜீவனிருக்குமென்றுசொல்லுகின்றோம்; சத்தாயிருக்கு மென்று சொல்லோம். சத்து அசத்தென்ற சொல்லையும், பரிபூரண மென்ற சொல்லையும், இரு பொருள்கள் ஒரு இடத்திலிராதென்ற நியாயப் பிரமாணத்தையும் இயர் கவனிக்காததுபோலவும் கேளா தது போலவும் ஜாடையாயிருக்கிறவரையில், நியாய மற்ற இவரது வெற்றுரைக்குச் சற்று இடமுண்டாம். இதோடு இதற்கொரு உவ மானமுங் கூறிப் பின்னும் குற்றவாளியாகி மீளமுடியாது போகின் றார். இவ்வுவமானத்தினால் இவரது பேதைமை யின்னும் விளக்க மாகின்றது. இவர் கூறும் உவமானமாவது:—"சுவகிரகத்திலே தன் மனைவி மக்க ளாயினோர்க்கு ஈசமானாய் நின்றான் ஒருவன் மற்றோர் இராசமந்திரியை நணுகியவிடத்துத் தான் தாசனாய் ஒழுகுவா னன் றித் தன் கிரகத்து ஆதிபத்தியத்தை இராசமந்திரிமுன்செலுத்த இய லாதவாறுபோல...சீவேசுவரருக்கு மேலாய்ப் பிரமமெனப்பட்டு... ஞாதிருவாய் (ஆன்மாவாகிய சீவப்பிரமமாய்) நிற்ப தன்றிப் பிரமத் துக்கு முன்னே தானும் பரப்பிரமமென்று நிற்றலாயோ ஓர்போதும் ஆகாது ஆகாது" எனப தாம். இம்மாதிரி ஆசங்கைகளைச் சோ. நா. ஒருமுறைசெய்து மறுக்கப்பட்டு மௌனமுற் றிருக்கின்றனர். அத னை இவர் கேட்டேனுமிருந்தால் மீண்டும் இத்தகைய ஆபாச ஆசங் கையினைச் செய்து அவமானப்படமாட்டார்! இப்போதேனும் அம் மறுப்பினை "மாயாவாத சைவசண்டமாருதம்" என்ற நூலில் 69, 70 வது பக்கங்களிற் கண்டடங்குவாராக. இவர், உத்தரத்தைக் கவனி யாது ஆசங்கையினை மாத்திரம் எடுத்துக்கொண்டார். அவ்வுத்தரமே போதுமாயினும் இவ்விடத்துஞ் சிறிது கூறுவாம். இவர் இராச மந் திரி இடத்தில் சிவத்தை வைத்தார்; தாசன் இடத்தில் சீவனை வைத் தார். வைத்துத் தாசனது ஆதிபத்தியம் இராச மந்திரியி னிடத்துச் செல்லாமைபோலச் சீவனது ஆதிபத்தியம் சிவ னிடத்துச் செல்லா தென்றார். இதில் உவமானத்துக்கும் உவமேயத்துக்கும் பொருத்த மின்மையை ஐயர் அறிந்தன ரின்று. இராச மந்திரி எண் சாண் அளவுள்ள விடத்தில் நிற்கும் ஏகதேச மனிதன்; தாசனும் அப்படி யே எண்சாண் அளவுள்ள ஏகதேச மனிதன். இவ்விருவரும் அவ்வி யாபக ஏகதேச கண்டப் பொருள்கள். உவமேயம் இதற்கு ஒத்தி ல்லை. எங்ஙன மெனின் சிவம் நீக்கமற எங்கும் நிற்கும் பரிபூரணப் பொருள்; ஜீவனோ, ஏகதேச கண்டப் பொருளாகும். எங்கும் பரிபூர ணமான சிவத்துக்கு எண்சாணுடம்புள்ள இராசமந்திரியை உவமா னங் கூறினார். உவமேயத்துக்குப் பொருந்த உவமானஞ் சொல்லக் கற்கும் காலம் வரும்போது அத்வைத சித்தாந்தத்தினிடத்து குற்றங் கூறப் பூர்வபக்ஷியார்க்கு நா எழபாட்டாது. சிவம் பரிபூரணப்பொரு ளென்றும், அதன்கண் யதார்த்தமாய் மற்றொரு பொருளிராதென் றும் போலியாயிருக்கு மென்றும் சொல்லி வாதஞ்செய்யு மிச்சமய த்திற்குறை கண்ட அவ்வியாபக இராஜமந்திரி தாச சத்தியப்பொருள்

உவமானஞ் சொல்ல வேண்டும்? இவ் விதத் தப்புவமானங் கூறிப் பேதையர்களை யேமாற்றுவது ஐயர்க்கு அழகன்று. இதற்கு முன் சூளை வாசியார் இவ் விஷயத்தைப் பற்றி வாதஞ் செய்து தோல்வி யடைந்ததை யறிந்தும் "இந்தப்பூனையும் பால் குடிக்குமா?" என்றவாறு ஒன்றுந் தெரியாதுபோலப் பேசுவது நன்றுமா? ஐயர் என் இவ்விதத் திரிபுகள் செய்யவேண்டும்? நாம் கண்ணை மூடிக்கொண்டு நித்திரை செய்கின்றோமென நினைத்தனரோ? இத்தகைய மோச வழியிற் சென்ற ஐயர் ஒருபோதும் மீள மாட்டாரென்றறிக. இனி இதனை யாம் பொருத்தமாகக் கூறுகின்றோம் கேட்பாராக. இராச மந்திரி ஸ்தானத்தில் தற்பத வாச்சியார்த்தமான ஈசனையும், தாசன் ஸ்தானத்தில் துவம் பத வாச்சியார்த்தமான ஜீவனையும் வைத்தால் உவமான உவமேயங்கள் பொருந்திப் போம். கைலாயத்தில் ஈசனுக்குப் பணிவிடை செய்து கொண்டிருக்கும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் அவ்வீசனுக்கு வேறே. இவ்வீசன் ஸ்தானத்தில் இராச மந்திரியையும் ஜீவன் ஸ்தானத்தில் சுந்தரமூர்த்தி சுவாமிகளையும் வைத்தால் உவமான உவமேயங்கள் ஏகதேச கண்டப் பொருள்களான மைபற்றிப் பொருத்தமாய்ப் போம். உவமானம் எவ்வளவு தூரம் போமென் றறியாது ஏக தேசமான இராச மந்திரி உவமானத்தைப் பரிபூரண ப்ரம்மத்துக்குக் கொண்டுபோய்ச் சொல்வது தகுமா? ஐயர், ஜீவேசரென்ற சொல்லை யெடுத்தும் அதற்கேற்ற உவமான உவமேயத்தைப் பொருத்திக்கொள்ளாமல் அதை விட்டு ஏன் ஜீவேசுரைக் கடந்த ப்ரம்மத்தினிடம் போனார்? நமக்குச் சீவேசுவரர் வரையில் இராச மந்திரி தாச உவமானம் சம்மதம். இது நமக்கு அனுகூலமே யொழியப் பிரதிகூல மல்ல. அதற்குமேல் பரிபூரண ப்ரம்மத்துக்கு ஷை உவமானம் பொருந்தாது.

இவர் சொல்லிய ஷை உபநிஷத்தின்படியும்,

திருமந்திரம் காரிய காரணோபாதி.

காரியமேழிற்கலக்குங்கடும்பசு
காரணமேழிற்கலக்கும்பரசிவன்
காரியுங்காரணங்கற்பனைசொற்பதப்
பர்ரறும்வாழில்பராபரத்தானே. (ரு)

இத் திரு மந்திரச் செய்யுளின்படியும் காரியோபாதி யுள்ளவன் ஜீவன், காரணோபாதி யுள்ளவன் ஈசன். ஜீவன் அடிமை, ஈசன் ஆண்டான். இவ்விருவரும் ஒன்றாக மாட்டார்கள். ஆண்டான் அடிமை யாவதும் அடிமை யாண்டானாவதும் என்று மில்லை. இதற்கு இவர் கூறியவண்ணம் ஜீவன் ஸ்தானத்தில் தாசனும், ஈசன் ஸ்தானத்தில் இராச மந்திரியுமாம். இவ்வுவமான உவமேயங்களை அங்கீகரித்தே கைலாயத்தில் இராச மந்திரியைப்போ லிருக்கிறான் ஈசன், தாசனைப் போ லிருக்கிறான் ஜீவன். கைலாயத்தி லிருக்கும் ஈசன் ஜீவனாவதும், ஜீவன் ஈசனாவதும் என்றுமில்லை. இதையனுசரித்தே,

கைவல்லியம் தத்துவவிளக்கப் படலம்.

இந்தநீதொம்பதத்தினிலக்கியப்பொருளாமென்றும்
பந்தமில்பிரமமேதற்பதந்தனினிலக்கியார்த்த
மந்தமாஞ்சீவனீசனவர்களே வாச்சியார்த்தஞ்
சந்ததம்பேதமாவார்தமக்கைக்கியங்கூடாதே. (எசு)

இச்செய்யுளும் பிறந்ததென்க. இதனாலே அத்வைதிகள் ஜீவேச பேதத்தை யொப்புக் கொள்ளுகின்றார்களென்பது நிச்சயம். ஆனால் இது மாயைக்குக் கீழ்ப்பட்ட விடம். மாயைக்கு மேற்பட்ட விடத்திலோ இந்தப்பேதஞ் சொல்லமுடியாது. ஏனெனின் அவ்விடத்தி லுள்ள பிரமம் பரிபூரணப பொருள்; ஆதலால் அதில் போலியாக வன்றி யதார்த்தமாக ஒரு பொருளு மிராது. அவ்வாறு யதார்த்த மான பிரமத்தை யிராசனாக வைத்து, போலியான ஜீவனைத் தாசனாக வைத்தால் இதுவும் பொருத்தமாய்ப் போம். ஆனால் இது ஏகதேச உவமானம்.

இதுநிற்க; எங்கே துவிதமும், கண்டத்துவமும், திரிபுடியு முண்டோ, அங்கே மாயையுண்டு, பந்தமுண்டு, சங்கற்ப விகற்ப முண்டு, பிறப்பிறப் புண்டு, அசத்தியத்துவ முண்டு, இன்னும் அனேக அநர்த்தங்களு முளவென்று த்வித சைவரே மாயாவாதிகள் என்னும் நூலில் 49—71 வது பக்கங்கள் வரையிலும், 'அவைதிக சைவ சண்டமாருதம்' 69—71 வது பக்கங்கள் வரையிலும் சுருதி யுக்தி அனுபவ சம்மதமாய் விரிவுபட வரைந்திருந்தும் அதற்கு ஒன் றும் பதில் சொல் லாது இவ் விடத்தில் வெற் றுரையால் குற்றங் கூறுகின்றார். ஐயர், மாயா சம்பந்தமுள்ள ஜீவேச பேதத்தை முடிந்த நிலையெனக் கொண்டவராகலின், அதற்கிணங்க மாயாவாதியாய் நின்று, மாயாரகித உபநிஷத்தையும், திருமந்திரத்தையும் குற்றப் படுத்து கின்றார். இராஜ மந்திரி தாச உவமானம் எதுவரையில் பிரமாணமோ, அதுவரையிற்றான் பிரமாணம்; முற்றும் பிரமாண மாயின் மேலே சொல்லிய தோஷங்களெல்லாம் வந்து பொருந்தும்.

## வைதிகசைவம் அத்துவிதம்.

இதன் பேரில் பின்னும் ஒரு அறியாமையினை வெளிப்படுத்து கின்றார். அது "வைதிக சைவ பதி பசு பாச விளக்கம் சுவேதாசுவத ரோப நிஷதாதிகளிலே சுருக்கமுற நிகழ்வதே பாசுச்சீவேசுவர மாயா வாத விசாரத்தினால் சேஷிக்கும் பிரமம் (ஆன்மா) பல சாங்கியயோ கோப நிடதங்களிலே பெரிதும் முடிவாய்ப் பேசப் படுகின்றமையா லன்றோ லிங்க புராணமும் 'சைவஞ் சங்க்ஷிப்ய வேதோக்தம்' சைவஞ் சுருக்கமுற வேதத்திற் சொல்லப்பட்டது என்ற கருத்தை யறிந்து, சாங்கியயோகோப நிடதங்களை வேதாந்த மென்றும், அதிலே பிரதி பாதிக்கப்பட்ட பிரமத்தை (ஆன்மாவை) ஞாதிரு என்றும் அதனைத்

துவம் பதத்தினலே சுட்டிய பசு என்றுங் கொண்டு 'வேதாந்த தொம்பதமேவும் பசு வென்ப' என்று கூறியதாம்.

சுவேதாசுவதர உபநிஷத்தாதிகள் வைதிக சைவமென்பதும், அதில் பதி பசு பாசங்களைப்பற்றி அதாவது ஈச ஜீவ ஜகங்களைப்பற்றிக் கூறுகின்றன வென்பதும் யதார்த்தமே யாயினும் இவரது அவைதிக துவித தாந்திரிக மாயா சைவத்தைப் பற்றிப் பேசவில்லையே.

சூதசங்கிதை கடவல்லியோடு சுவேதாசுவதரோபநிஷத்.

உடம்பினிருதயவெளியின்மத்தியில்சீவேச்சுரருள்ளாரன்றொரு
ளடங்கரியகன்மபலஞ்சீவனேநானாருமனுபவிப்பான்
மடங்கவற்றுமீச்சுரன்மற்றனுபவியானாராயின்மற்றிவர்க்குத்
தொடங்குபரமார்த்தத்திற்பேதமிலையென் றுணர்வீர்தூயவானீர். (க)

செப்புமவற்றொருகேலவார்விவேகிகள்சின்மாத்திரமேதெரிந்துகொள்வார்
திப்பியவானீர்சாக்கிராதிமூன்றவத்தைசளுஞ்சிவனேமற்றுந்
தப்பிலிகபரலோகததிருப்பனயாவுஞ்சிவனேசாற்றுங்காலை
யொப்பிலாவப்பரமசிவனுக்குவேறாகவொன்றுமில்லை. (கக)

இலிங்கபுராணம் தியானவிதி.

விரிந்தபூதங்களினோடுவிளம்பிந்தியங்கள்சத்துவங்கள்
திருந்தாஅகங்காரத்தினொடுசெறிமூக்குணங்கள்மாத்திரைகள்
பொருந்துமாயைசிவனிவைபொய்யர்ம்யாமேபொய்யின்றி
யிருந்தெவ்விடத்தும்நிலைபெறுவோம்அதனாற்றூனுமெனஇசைப்பார். (கூக)

ஷை சனகன்முதலினோர்க்கு முத்திகொடுத்தது.

தீதில்ஞானந்தியானமிகச்செறியும்பந்தந்தீர்ந்திடுதல்
ஓதுகின்றஆன்மாவுக்குளதுபோலத்தோன்றிடுமால்
ஏதஞ்செய்யுமாயையினலிதனையறிந்தோனியாவனவன்
ஆதியாயபந்தத்தினகப்படாமலமர்குவனல். (உ)

சிவபுராணம் ஞானசங்கிதை.

"ஞாதா, ஞானம், அப்படியே ஞேயம் என்னும் (திரிபுடி சொரூபமான) இவ்வெல்லா ஜகத்தும் சிவமாம். பிரமா முதல் திருண பரியந்தமான யாதோர் ஜகத்துக் காணப்படுகிறதோ, இதுமுற்றும் அதுவே (சிவமேயாம்). (இங்ஙனம் ஆகுமோ ஆகாதோ வென்று) விசாரணை செய்ய வேண்டியதில்லை."

"துவித விஷயமான புத்திபேதம் அஞ்ஞானமாம். (அவித்தையினலாகிய தாம்)அன்னியத்திற்கு ஜகத் விலக்ஷணமாகிய பிரமத்திற்கு இரண்டாவதில்லை. தரிசனங்க (வைசேஷிகாதி சாஸ்திரங்கள்) ளெல்லாவற்றிலும் துவிதமத புத்தி பேதம் காணப்படுகின்றது."

"வேதாந்திகள் எப்போதும்கேவலம்அத்வைதத்தைப் பிரதிபாதிக்கின்றார்கள். ஜீவன் பரமாத்மாவின் அம்சமே. அவித்தையினல் மோகிக்கப்பட்டு, அதன் வசமுடையவனாய் நான் வேறென்றறிகிறான். அவ் வவித்தையினின்று (சிரவணாதி சாதனங்களால்) விடுபட்டுச் சிவனாகின்றான்."

"எப்படிச் சமுத்திரம், மண், பொன் என்பவை உபாதியினால் முறையே அலையாதியாகவும், கடமுதலியனவாகவும்,குண்டலமுதலியனவாகவும்)நாநாத்துவத்தை யடைகின்றனவோ, அங்ஙனமே, (சிவமும்) உபாதி பேதத்தால் நாநாத்துவத்தை யடைகின்றது."

"ஞானத்தில் காரணமான பிரமம் காணப்படுகின்றது; அஞ்ஞானத்தில் நாநாவிதமான ஜகத்துக் காணப்படுகின்றது. எல்லாம் சிவமே; சிவமே எல்லாமுமாம். இங்கே பேதமென்பது யாதுமில்லை."

(☞ இதற்குச் சம்ஸ்கிருதமூலம் "பேதவாத திரஸ்காரம்" 82,83 வது பக்கங்களிற் காண்க.)

சிவபுராணம் ஞானசங்கிதை 17வது அத்தியாயம்
தமிழ் மொழிபெயர்ப்பு.

"ஒரு விதையி லிருந்து விருக்ஷந் தோன்றி நாநாவிதமான கொம்பு இலை முதலியன உண்டாவதுபோல, நீர்தச் சிவபெருமானிடத்தி லிருந்து பிரபஞ்சங்களெல்லாந் தோன்றின. ஜகத்தின் முதலிலும் இறுதியிலும் சிவபெருமானே இருப்பவர். சிவபெருமான் ஜகத்திலிருக்கிறார்; ஜகத்துச் சிவபெருமானிடத்தி லிருக்கிறது. நானும் சிவம்; நீயும் சிவம். சிவத்தைவிட இரண்டாவதுபொருள் கிடையாது. அவ்வாறிரண்டாவது பொருளிருக்குமென நினைத்தல் அஞ்ஞானமேயன்றி ஞான மாகாது. காரியமான ஜகத்தில் காரணமான சிவ பெருமான் வியாபித்திருக்கிறா ராகலின் காரியம் ஜகத்தென்றும், காரணம் சிவ மென்றும் தெரியவேண்டும். அஞ்ஞானத்தாற் காரண காரியங்கள் பேதமாகக் காணப்படுமன்றி ஞானிகட்குப் பேதமில்லை. சகல ஜகத்தும் சிவமயமேயாம் என்று கூறினர்."

ஷை ஷை 18 வது அத்தியாயம்.

"மேனையை நோக்கி விஷ்ணுமூர்த்தி மேலுஞ் சொல்லுகிறார். சிவபெருமான் யாவுமாக விளங்குகின்றாரென்று வேத * சிவாகமங்கள் கூறும். குற்றியைக்கண்டு மானுடனென்றும், கயிற்றைக்கண்டு பாம்பென்றும், இப்பியைக்கண்டு வெள்ளி யென்றும் சந்தேகித்து, உண்மை யுணர்ந்த பிறகு மானுடனல்ல, குற்றியென்றும்; பாம்பல்ல, கயிறென்றும்; வெள்ளியல்ல, இப்பியென்றும் மனச் சந்தேகம் நீங்கித் திடப்படுமாறு, அஞ்ஞானத்தால் சிவனுக்கு இரண்டாவதாகத் தோற்றும் பிரபஞ்சமுழுதும் ஞான முற்றபொழுது முக்காலத்திலும் சிவனேயென்று தெரியும். மேனா! உனக் கின்னுந் திருட்டாந்தங்கள் சொல்லுகிறேன். உலகத்தில் வேஷக்காரன் வெவ் வேறு வேஷத்தைத் தரித்தாலும் உண்மையில் அவனேயாக விருக்கிறான். தெரியாதவர்களுக்கு வேறொருவனென்று மயங்கச்செய்து பொருள் சம்பாதிக்கிறான்; தெரிந்தவனோ அவனைக்கண்டு நகைக்கிறான். அப்படியே ஞானியானவன் பிரபஞ்சத்தைச் சிவனுக் கிரண்டாவதாக நினையான். அஞ்ஞானி யானவன் பிரபஞ்சத்தைச் சிவனுக்கு வேறாக நினைப்பான்; அன்றியும் ஒரு புருஷன் அனேக வஸ்திரங்களைப் பலவிதமாக மதிக்கக் கருதி உடுத்துகிறான். வஸ்திரங்கள் வெவ்வேறாயினும் தரித்துக்கொள்பவன் ஒருவனே; அப்படியே சிவஸ்வரூபம் வேறொன்றிற் கலந்தபொழுது நாநாத்து வகமாகத் தோன்றுமன்றி விசாரிக்கையில் ஒன்றே. ஒருவனிடத்தில் நான் எனது என்னும் தற்போதம் இருக்கு மளவும் பந்தன முண்டு. அகங்காரம் போனபொழுது தானே சிவ மென உணர்

* சம்ஸ்கிருதத்தில் வேதங் கூறுகின்றதென் றிருக்கின்றது.

வான். ஸ்படிக மணியானது செம்பருத்திப் புஷ்ப சையோகத்தால் வேறு நிறமாகக் காணப்பட்டதுபோலப் பிரகிருதி சம்பந்தத்தால் சிவ பெருமானிடத்தில் அனேகத்துவந் தோற்றுகிறது. பிரகிருதியைக் காட்டிலும் சிறந்த பரிபூர்ணப் பிரமமாகிய சிவதத்துவார்த்தத்தை நாங்களே இதுகாறும் அறியோம்."

ஷை மூன்றாவது பிரமவிஷ்ணுக்களுக்கு வரமளித்த அத்தியாயம்.

"சாக்கிர, சொப்பன, சுழுத்தி, துரியமென்னும் நான்கிற்கும் மேம்பட்ட துரியாதீதமாயும், மாயா சம்பந்த விகார மில்லாததாயும், சஜாதீய விஜாதீய மென்னுந் தொந்தமற்றதாயும், இரண்டாவ தில்லாததாயும், உள்வெளி யற்றதாயும், ஆதி மத்தி யாந்த ரகிதராயும், ஆநந்தத்திற்குக் காரணமான பரமாநந்தமாயும், சத்தியமாயும், அழிவில்லாததாயும், முக்கியமாயு மிருக்கிற ஏகாக்ஷரமென்று சொல்லப்படுகிற பரப்பிரமத்தைப் பார்த்தார்."

இந்தச் சுவேதாசுவதர உபநிஷத்திலும், இலிங்க புராணத்திலும், சிவ புராணத்திலும் துவித மதப்பும், அத்துவித சித்தாந்தமும் ஏற்படுவதால், அம் மூன்றும் இவரது துவித தாந்திரிக மாயா சம்பந்த முள்ள ஆபாச பொய்ச் சைவ மன்று; அத்துவித வைதிக மாயா ரகித யதார்த்த சைவமாம். அது பற்றியே இவர் துவித மத விரோதமாக ஜீவன் மாயை இவைகளைப் பொய் யென்றும், பிரமம் ஒன்றே மெய்யென்றுங் கூறி, அத்துவித சித்தாந்தத்தைத் தாபித்த இலிங்கபுராணம்

பதி பசு பாச அத்தியாயம்.

பாசமென்பவீரைந்தாயுறைகின்றவிந்தியங்கள்பசுவற்றுள்
பேசுகின்றவிடயங்களெம்பூதப்பிரிவிறன்மாத்திரைகண்மற்றை
யாசுடைமுக்குணங்களெனவுறைகின்றவிவைகளாமென்பர்தொன்னூன்
மாசறநன்காயுணர்ந்துவைதிகசைவத்தின்வழிநின்றவல்லோர். (சு)

என் வைதிக சைவத்தைக் கூறிற்றென் றறிக. சைவ புராண விரோதமான இங்ஙனமாய இவரது அசைவம் சைவமாவதும், அதினும் வைதிக சைவமாவதும் வேத மல்லாததை வேதமாக்கி அதிலும் சத்தியமாக்கியவர் கதையே யாமென்க. இவர் தம்மதஞ் சைவமென்று சொல்லிக்கொள்ள இஷ்டமிருந்தால் வேதாதி பதினான்கு வித்தைகட்கும் அவற்றை யாதாரமாய்க்கொண் டெழுந்த திருவாசக தேவாராதிகட்கும் வேறுபட்ட பிரமாணங்களை ஆதாரமாய்க் கொண்டு சொல்லிக்கொள்வாராக.

ஷை சுவேதாசுவதர உபநிஷத்திலும், இலிங்க புராணத்திலும், சிவபுராணத்திலும்

திருமந்திரம் தீதி.

உடலாயுயிராயுலகமதாகிக்
கடலாய்க்கார்முகினீர்பொழிவானாய்
இடையாயுலப்பிலியெங்குந்தானாகி
யடையார்பெருவிழியண்ணல்நின்றானே. (ரு)

ஷை திரோபாவம்.

மண்ணொன்றுதான்பலநற்கலமாயிடு
முண்ணின்றயோனிகளெல்லாமொருவனே. (௧0)

திருவாசகம்.

வானாகிமண்ணாகிவளியாகியொளியாகி
ஊனாகியுயிராகி.

சுந்தரமூர்த்திசுவாமிகள்.

ஊனாயுயிரானாயுடலானாயுலகானாய்.

ஸ்ரீநாவுக்கரசுசுவாமிகள்.

இருநிலனாய்த்தீயாகிநீருமாகியியமானனாயெறியுங்காற்றுமாகி
யருநிலையதிங்களாய்ஞாயிறுமாகியாகாசமாயட்டமூர்த்தியாகி.

வாயுசங்கிதை பரசிவப்பிரபாவம்.

நிற்பனநடப்பனயாவும்சேர்ந்திடில்
பொற்புறுசடையவனுருவம்போலுமால். (௧)

இந்தப் பிரமாணங்களினாலும் பிரமமே ஜீவேசர்களாயும் இதற்குமுன் பேசியபடி ஜீவன் துவம் பதமும் ஈசன் தற்பதமுமாயும் ஆகின்றன வன்றோ? இவ்வாது பேதம் இங்குப் பலிக்கிறதா பாருங்கள். ஒரு பொருள் பிறிதொரு பொருளா யாகவேண்டுமாயின், காரண காரியசம்பந்தத்தினாறன்றாகுமெனத் 'துவிதாத்துவிதவாதம்' 43—48 வது பக்கங்கள் வரையில் யுக்தி அனுபவங்களினாலும் உபமானங்களினாலும் தாபிக்கப் பட்டிருக்கிறது. ஆகவே, சுவேதாசுவதர உபநிஷத்தும் மற்ற உபநிஷத்துகளும் இன்னும் மற்றப் புராண இதிகாசாதிகளும் திருவாசக தேவார திருவிசைப்பா திருப்பல்லாண்டு முதலிய நூல்களும் ஒருபொருள் கொண்டு முடிகின்றன வென்பது நிச்சயமாம். பிரம மென்பதும் ஆன்மா வென்பதும் சிவ மென்பதும் கடவுளென்பதும் எங்கும் பரிபூரணமாய் நீக்கமற நிறைந்து நிஷ்கள நிர்க்குண நிச்சல நிராதார நிஷ்பிரபஞ்ச நிர்லேப நிரஞ்சன நிர்ம்மல முதலிய அதீத இலக்கணங்களைப் பெற்ற ஒரு பொருளின் பெயராமெனச் சுருதி யுக்தி அனுபவத்துடன் 'பேதவாத திரஸ்கார'த்திலும் ஏனைய நூல்களிலும் பேசப்பட்டிருக்கிறது. சுருதி ஸ்மிருதி புராணாதிப் பிரமாணங்களைக் கைக்கொண்ட வைதிக சிரேஷ்டர் பிரமம் அல்லது சிவன் அல்லது கடவுளுக்கு ஆன்மா வென்னும் பெயரைச் சொல்லுவார்கள். மேற்படி நூல்களை அப்பிரமாணமாகக் கொண்ட அவைதிக பாஷாண்டிகளோ, அதை யொப்பாமல் ஜீவான்மாவுக்கே கூறுவார்கள். இதன் உண்மை பிதுசாறுஞ் செய்த வாதத்தினாற் புலப்படும். இன்னும் இவ்விஷயம் 'பேதவாத திரஸ்கார'த்தில் பலமாகப் பேசப்பட்டிருக்கிறது; ஆண்டுக் கண்டுகொ.

"லிங்கபுராணமும் சைவபுராணமும் சைவஞ் சுருக்கமுற வேதத்திற் சொல்லப்பட்டது' என்று கூறினவே யன்றி, துவிதத்தைச் சத்தியமெனக் கூறினவா? இன்றே. பின்னைத் துவிதத்தை மறுத்து அத்துவிதத்தைத் தாபித்தன வென்பதற்கு மேலே காட்டிய இலிங்க சைவபுராணப் பிரமாணங்களே போதியனவாம். எவ்விடத்திலாவது சைவம் என்ற சொல் வந்து விட்டால் அது வேத சாஸ்திர விரோதமான தமது சைவ மெனச் சொல்ல ஆசைப்படுகின்றார். இது பொருந்தாது. சிவோத்கருஷ மாகச் சொல்லும் உபநிஷத்துகளும், சிவ புராணங்களும், தேவார திருவாசக திரு மந்திர முதலிய நூல்களும் சிவனைப்பற்றிச் சொல்லி, தத்துவவிசாரத்தில் சிவன் ஒன்றே சத்தியம், மற்றச் சேதனசேதன உலகு அசத்தியமென்று சொல்வதால், ஷெ நூல்களில் அவைதிக துவிததாந்திரிக சைவர்க்குச் சிறிதும் ஆதார மின்றென்றறிக. அது பற்றியே சிவஞான "வள்ளலார்" "துவித சைவனை மறுத்தல்" என்ற தலைப்பில்

வள்ளலார் சாந்திரம் துவிதசைவனை மறுத்தல்.

ஒன்றுயுலகனைத்தும்ஆறுறென்றப்பமுனி
பொன்றுமொழியாற்புகன்றிருக்க-குன்றுத
முத்தியிலுமும்முதலுமுண்டென்றுரைத்தலெவன்
பித்தமுறுஞ்சைவாநீபேசு. (கஎ)

ஓசையொலியெல்லாமாறுப்நீயென்றபினர்ப்
பேசவிரண்டுண்டோபேய்ச்சைவா - ஆசையெலாம்
அற்றவிடம் முத்தி நிலையோ அஃதெல்லா
முற்றவிட முத்திநிலையோ. (கஅ)

இவ்வாறு திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரத்தைக் கொண்டே துவித சைவனை மறுத்தாரென்க.

துவம்பதம், தற்பதம், அசிபதம் ஆகியமுப்பதங்களுக்கு வேதாதி கலைகளில் உவமானம் என்ன சொல்லுகின்றதெனப் பூர்வபக்ஷியார் எடுத்துப் பேச வில்லை. உவமேயம் பிரத்தியக்ஷ விஷய மன்று, உவமானமோ பிரத்தியக்ஷம். நமக்கு உவமேயத்தில் ஐய முண்டாயின் உவமானத்தைக்கொண்டு தீர்த்துக்கொள்வது ஆவசியகம். இவர்க்கும் நமக்கும் உவமேயத்தில் விவாதம். இவ் விவாதம் உவமானத்தாலேயே தீர்த்துக் கொள்ளவேண்டும். உவமேயத்தில் துவம்பதம் தற்பதமாகிய இரண்டு பொருளும் அசிபதத்தில் ஒன்றா? இரண்டா? வென்பது வழக்கு. உவமானத்தில் தலையிட்டால் தமது துவிதமதம் ஆடிக்காற்றி லகப்பட்ட பட்டம்போல் பறக்குமென அஞ்சிப் பூர்வ பக்ஷியார் இதுகாறும் அவ்வழிக்கே போகாமல் நின்றார். அவ்வுவமானத்தினால் அத்துவிதம் பசு மாத்தாணிபோல் நிலை நிற்பதினால் அத்துவிதிகள் அதைவிடாமல் பேசிவருகின்றார்கள். அதை விளக்க முன்பு ஒரு விஷயத்தைப் பேசுவாம்.

## இப்பிரமாணத்தாலெனல்.

"மரத்தை மறைத்தது என்னுஞ் செய்யுளிற் போந்த 'பரம்' என்னும்பதத்தை அச்செய்யுளை அருளிய திருமூல நாயனார் கருத்துக்கொப்பக் கால பரம் அதீத பர தரிசனம் விசுவ சாக்கிரம் என்னும் பராவத்தைப் பாற்படநின்ற பரைக்குப் பொருள் படுத்தாது அதற்குக் கீழ்ப்பட்ட சாக்கிர சுழுத்தி சாக்கிர துரியம் என்னும் பராவஸ்தைப் பாற்பட நின்ற ஆன்மாவுக்கு (பிரமத்துக்கு) இசைவுற வேதாந்தியார் பொருள் படுத்தியது எப் பிரமாணத்தாலோ" என்று ஐயர் கூறினார். பரம் என்ற சொல்லுக்குப் பரை யென இவர் பொருள் செய்தாலும் பரைக்கும் பதிக்கும் அபேதமாகலின், பரையை மறைத்த தென்றாலும் பதியை மறைத்த தென்றாலும் ஒன்றுதான். வெண்மையை மறைத்த தென்றாலும் பாலை மறைத்த தென்றாலும் ஒன்றுதான். குணம் குணியை விட்டுத் தனியே யிராது. அங்ஙனமே வெண்மை பாலை விட்டுத் தனியே யிருப்ப தில்லை. இவ்வுவமானத்தின்படி குணியான பதியை விட்டுக் குணமான பரை தனியே யிராது; ஆகலின் பரத்தைப் பார்முதல் பூதங்கள் மறைத்தன வென்பது சரியானதேயாம். பரத்தைப் பரையென விவர் வைத்துக் கொண்டாலும் பொய்யான யானை மெய்யான மரத்தை மறைத்தது போல, பொய்யான பார் முதல் பூதங்கள் மெய்யான பரத்தை மறைத்த தென்பதற்கு ஆக்ஷேப மென்னை? சபாபதி நாவலர், பொய் மெய்யை மறைக்கா தென்றார். மறைக்கு மென்று 'அத்வைத சித்தாந்தி' கயிற்றரவு முதலிய திருட்டாந்தங்களைக் கூறி, அதனோடு 'மரத்தை மறைத்தது மாமத யானை' என்ற செய்யுளையுங் கூறினார். ஐயர் 'பரம்' என்ற சொல்லுக்குப் 'பரை' எனப் பொருள் கூறினாரே யன்றி, சபாபதி நாவலர் மதத்தி னின்று, பொய், மெய்யை மறைக்கா தென்று கூறினா ரின்றே; இன்னும் சபாபதி நாவலர்க்கு ஆறுப்பாய் வந்த விஷயங்களி லொன்றுக்கேனும் சமாதானஞ் சொல்லி, அவரைக் கை தூக்கி விட்டாரின்றே. பரம் என்ற சொல்லுக்குப் பதி அல்லது ஈச னென்றே பொருள் கூற வேண்டு மென்று நியாயங் கூறுகின்றாம். துவம்பதம், தத்பதம், அசிபதம் இம்மூன்றினைப் பற்றிக் கூறுவது தத்துவமசி மகா வாக்கியம்; அது சாம வேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்தின் பாலது. அம் முப்பதத்தில் துவம்பதத்தின் பொருள் ஜீவன், தற்பதத்தின் பொருள் ஈசன், அசிபதத்தின் பொருள் ஏக சைதன்னியம். இதையே

திருமந்திரம் முப்பதம்.

தொம்பதந்தற்பதம்தோன்றுமசிபதம
நம்பியசீவன்பரஞ்சிவனாய்நிற்கும். (ங)

ஷை முச்சூனியம் தொந்தத்தசி.

தற்பதந்தொம்பந்தானுமசிபதம்
தொற்பதமூன்றுந்துரியத்துத்தோற்றவே
நிற்பதுயிர்பரநிசழுசிவமும்மூன்றின்
சொற்பதமாகுந்தொந்தத்தசியே. (க)

தொம்பதமாயையுட்டோன்றிடுந்தற்பத
மம்பரைதன்னிலுதிக்குமசிபத
நம்புறுசாந்தியினண்ணுமவ்வாக்கிய
மும்பருரைதொந்தத்தசிவாசியாமே. (உ)

ஆசியவச்சோமந்தேய்வதுதனிடத்
தாகியவவ்விட்டாகாயமுபாதான
மேகியதொந்தத்தசியென்பமெய்யறி
வாகியசிவன்பரசிவனுமே. (௩)

ஷை காரிய காரணோபாதி.

காரியமேழிற்கலக்குங்கடும்பசு
காரணமேழிற்கலக்கும்பரசிவன்
காரியகாரணங்கற்பனைசொற்பதப்
பாரறும்பாழில்பராபரத்தானே. (உ)

ஷை தத்துவமசிவாக்கியம்.

ஆகியவச்சோயந்தேவதத்தனிடத்
தாகியவிட்டுவிடாதவிலக்கணைத்
தாகுபசாந்தமேதொந்தத்தசியென்ப
வாகியசிவன்பரசிவனுமே. (௫)

தொம்பந்தற்பதஞ்சொல்லுமசிபத
நம்பியமுத்துரியத்துமேனுடவே
யும்பதமுப்பதமாகுமுயிர்பரன்
செம்பொருளானசிவமெனலாமே. (சு)

இச்செய்யுள்க ளெல்லாம் விளக்குகின்றன. துவம்பத தற்பத அசி பதங்களுக்காகச் சுருதி யாதிகளில் கூறப்படும் கடாகாச மகா காச ஏகாகாச திருட்டாந்தங்களில் ஈசனுக்கு மகாகாச திருட்டாந்தங் கூறி யிருக்கின்றமையின் பரமென்பது குணி யாகிய ஈச னென்பதே பொருளாம்; குண மாகிய பரை யென்பது பொருளன்றாம். பராவத்தையில் சொல்லி யிருப்பதால் பரை யென்னின் அங்ஙன மேல் பராவத்தையில் வேறு ஒன்றும் சொல்லா திருக்க வேண்டும்; வேறு பல விஷயங்களும் சொல்லி யிருப்பதால் அது பொருந்தாது. மாயை யானது பரமாகிய ஈசனை மறைக்கு மென்றதற்கு இத்திரு மந்திரத்திலேயே மற்றொரு இடத்திலும் பிரமாணங் காட்டுகின்றோம்.

திருமந்திரம் சுத்தாசுத்தம்.

மாயைமறைக்கமறைந்தமறைப்பொருள்
மாயைமறையவெளிப்படுமெப்பொருள்
மாயைமறையமறையவல்லார்க்குக்
காயமுமில்லைக்குத்தில்லைதானே. (௬)

இதனுல் மறைப்பொருளான கடவுள் மாயையினுல் மறைக்கப் படுகிறு ரென்பது திருமந்திரப் பிரமாணமாம். அதனோடு

திருமந்திரம் புராவத்தை.

ஆயும்பொய்மாயை அகம்புறமாய்நிற்கும். (எ)

பொய்கண்டமாமாயை. (உ௬)

ஷை சூத்திரியம்.

அறிவாயசத்தென்னுமாமுறநன்று. (௬)

இச்செய்புள்களால் மாயையும் மாயா காரியங்களான முப்பத் தாறு தத்துவங்களும் பொய்யென் றேறப்படுவதால், பொய்யான மாயை மெய்யான கடவுளை மறைத்ததென்பது இனிது விளங்கும். துவம்பத தற்பதங்கட்கு வாச்சியார்த்த லட்சியார்த்தங்க ளுள்ளன. பரத்தை மறைத்த தென்பது லட்சியார்த்தத்தையே யாம்; வாச்சி யார்த்தத்தை யன்று. வாச்சியார்த்தம் கற்பனையும், இலட்சியார் த்தம் யதார்த்தமு மாதலின் மெய்யைப் பொய் மறைத்த தென் பது லட்சியார்த்தத்தையே யாம். துவம்பத வாச்சியார்த்தத்திற்குக் கட சலப் பிரதி பிம்ப ஆகாயமும், இலட்சியார்த்தத்திற்குக் கடா காயமும், தற்பத வாச்சியார்த்தத்திற்கு மேக சலப் பிரதிபிம்ப ஆகா யமும், தற்பத லட்சியார்த்தத்திற்கு மகாகாயமும் திருட்டாந்த மாதலினும், வாச்சியார்த்தத்திற்கு உவமானமாகிய கடஜல மேக ஜலப் பிரதி பிம்ப ஆகாயங்கள் கற்பிதங்களாதலினும், 'அத்வைத ....ணபரிகாரம்' 34 வது 35 வது பக்கங்களிலும் 'பேதவாததிரஸ் காரம்' 20, 21, 22 வது பக்கங்களிலும் காட்டிய சுருதியாதிப் பிர மாணங்களில் துவம்பத தற்பத லட்சியார்த்தத்துக்கே கடாகாய மகாகாயங்களைக் காட்டியிருக்கின்றமையினும், 'நீளவான்மாவின்' என்ற சூத சங்கிதையின் செய்யுள் ஈசனைக் கூறுமல் அதிஷ்டானப் பொருளையே கூறினமையினும் மெய்யைப் பொய் மறைக்கு மென்றதில் மெய்யென்பது அதிஷ்டானப் பிரமமேயா மென்க.

நிற்க; இவர் காட்டியபடி
'வேதாந்த தொம்பதமேவும் பசுவென்ப

என்னும் செய்யுளிலேயே துவிதகண்டனமும் அத்துவிததாப னமு மிருக்கின்றன. அச்செய்யுள் முற்றும் வருமாறு:—

திருமந்திரம் ஆறந்தம்.

வேதாந்ததொம்பதமேவும்பசுவென்ப
நாதாந்தபாசம்விடநின்றநன்பதி
போதாந்ததற்பதம்போயிரண்டைக்கியம்
சாதாரணஞ்சிவசாயுச்சியமாமே. (உசு)

ஐக்கிய மென்பதற்கு வேறு விதமாய்ப் பொருள் செய்ய முடியாது; ஏனெனில் இத்திருமூலநாயனுரே

திருமந்திரம் காரியகாரணேபாதி.

காரியமேழிற்கலக்குங்கடும்பசு
காரணமேழிற்கலக்கும்பரசிவன்
காரியகாரணங்கற்பனைசொற்பதப்
பாரறும்பாழில்பராபரத்தானே. (ரு)

என்றுரைத்த இச்செய்யுளின்படி ஜீவேசர் கற்பனை யாவதினுலென்க. ஐக்கியமென்ப தொன்றேயாம்; இரண் டைக்கிய மென்ப தன் பொருள் கடாகாய மகாகாயத்தைத யுவமான மாகக் கொண்ட (ஜீவேசர்க்குச் சாக்ஷியாய் விளங்கும்) கூடஸ்த பிர மைக்கியமாமென்க.

பின்னர் உயிர், பரம், சிவம் இவைகளின் அவஸ்தைகளையெல்லாம் வரிசையாய்க் காட்டி, இதற்குத் திருமந்திரப் பிரமாணங்களையுங் காட்டுகின்றார். இவ்வாறு காட்டுதற்குக் காரண மின்னதெனப் புலப்பட வில்லை. அவைகளை அல்லவெனச் சொன்னவர் யாவர்? அன்றி அது அத்துவித விரோதமென எவரேனும் சொல்லினரா? ஷை விஷயம் வேதாந்த நூலாகிய "சசிவன்ன போதம்" என்ற நூலிலும் சொல்லப்பட்டிருக்கின்ற தென்றறிக. இவர் துவிதத்தைத் தாபித்துக் கொள்ளவேண்டின், சிவத்துக்குப் பூரணத்துவங் கூறி, அதில் மற்றப் பொருள்கள் சத்தா யுளவெனக் கூறவேண்டும்; அதனோடு அதற்குப் பொருத்தமான வுவமானமுங் கூறவேண்டும். எவ்விடத்தில் துவிதத்திற்கும், அத்துவிதத்திற்கும் பேதங் காணப்படுகிறதோ, அவ்விடத்தைத யெடுத்துக்காட்டி; சுருதியினும், யுக்தி அனுபவங்களினும் தமது துவிதமதத்தை நிலை நாட்டிக்கொள்ள வேண்டும். அதைவிட்டு இரு பக்கத்தினர்க்கும் பொதுவான விஷயங்களைப் பேசிவிட்டு, அதனுல் தமது மதத்திற்குச் சாதக முளதுபோற் காட்டுவது என்னே? ஒரே சிவம் ஜீவேச பேதமாய் மண் குடம்போல விருக்குமென்பதற்குப் பிரமாணங்கள் திருமந்திரத்தினின்றே வருமாறு:—

திருமந்திரம் திதி.

தானேதிசைபொடுதேவருமாய்நிற்கும்
தானேயுடலுயிர்தத்துவமாய்நிற்கும்
தானேகடல்மலையாதியுமாய்நிற்கும்
தானேயுலகிற்றலைவனுமாமே. (உ)

உடலாயுயிராயுலகமதாகிக்
கடலாய்க்கார்முகினீர்பொழிவானு
யிடையாயுலப்பிலியெங்குந்தானுகி
யடையார்பெருவிழியண்ணனின்றானே. (௯)

ஷ் திரோபாவம்.

மண்ணொன்றுதான்பலநற்கலமாயிடு
முண்ணின்றயோனிகளெல்லாமொருவனே. (௧௦)

ஷ் கடுஞ்சுத்தசைவம்.

நானென்றுந்தானென்றுநாடிநான்சாரவே
தானென்றுநானென்றிரண்டிலாத்தற்பதந்
தானென்றுநானென்றதத்துவநல்கலாற்
றானென்றுநானென்றுஞ்சாற்றகில்லேனே. (௪)

ஷ் போதன்.

சீவனெனச்சிவனெனவேறில்லை
சீவனார்சிவனாயிட்டிருப்பாரே. (௧)

ஷ் சர்வ வியாபி.

உணர்வுமவனேயுயிருமவனே
புணர்வுமவனேபுலனுமவனே. (௧௦)

சிவமே யாவுமாயிருக்கிறதென்று சொல்லி, அதற்கு மண் குட திருட்டாந்தத்தையுங் காண்பிக்கும்போது, அங்ஙன மன்றென்று இவர் எங்ஙனஞ் சொல்லுவார்?

## திருமூலநாயனார் அத்துவிதி யென்பதற்கு மற்றொரு முக்கிய காரணம்.

திருமூல நாயனார் துவிதி அன்றென்பதற்கு மற்றொரு முக்கிய காரணத்தைக் காட்டுவாம். விட்டலக்கணை, விடாதலக்கணை, விட்டு விடாத லக்கணை யென்ற மூன்றனுள் அத்துவிதிகள் கொண்டது விட்டு விடாத லக்கணை. அது அத்துவிதிகளின் கொள்கை யெனக் காட்டி, இவரது சிவஞான சுவாமிகளும் மறுக்கின்றார். அது வருமாறு:—

சிவஞானசித்தியார் 9ம் சூத்திரம் 7 வதுசெய்யுளின் விசேஷவுரை.

"ஒருபொருள் மற்றொருபொருளாதல் யாண்டு மின்மையின் அது நானேனென்னு மொருவார்த்தைப் பொருள் படுமாறு யாங்ஙனமென் றாசங்கித்தார்க்கு ஒன்றுகெட் டொன்றாமெனக் கொண்டு பரிணாமங் கூறுவாரும், அது நானென்னு மிரு பெயரும் விட்டு விடாத * ஆகுபெயரெனக் கொண்டு கேவலாத்துவிதங் கூறுவாருமா யிடர்ப்படுவர்."

---

* ஆகுபெயர் இலக்கணையிலடங்கும்,

சிவஞான சுவாமிகளால் மறுக்கப் பட்ட விட்டு விடாத விலக்கணையைத் திருமூலநாயனார் சாம வேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்தின் தத்துவமசி மகா வாக்கியத்தை யெடுத்துக் கூறுங்கால்,

திருமந்திரம் தத்துவமசி மகாவாக்கியம்.

ஆகியஅச்சோயந்தேவதத்தன்னிடத்
தாகியவிட்டுவிடாதலக்கணைத்
தாகுபசாந்தமேதொந்தத்தசியென்ப
வாகியசீவன்பரன்சிவனாகுமே, (ந.)

என்றுவிட்டுவிடாதலக்கணையைக்கூறி, 'அச்சோயந்தேவதத்தனிடத்து' எனச் சோயந்தேவதத்தனை உவமானமாகக் கூறினார். அத்துவித நூல்களெல்லாம் விட்டு விடாதலக்கணையைக் கூறுகின்றனவென்பது அறியில் வரும் பிரமாணங்கள் சாக்ஷிசொல்லும்.

கைவல்லியம் தத்துவவிளக்கப் படலம்.

பன்னியசோயமென்னும்பதங்களின்வாச்சியார்த்த
மன்னியதேயங்காலமவனிவனென்பவெல்லாம்
சொன்னவிவ்விரோதம்விட்டுத்தொகையிலக்கியம்விடாது
முன்னிடிற்றேவதத்தனொருவனைவெளியாக்காட்டும். (அ௰)

தத்துவப்பதங்கடாமுஞ்சாக்ஷியாய்ப்பிரமமான
வத்துவைவிடாமற்பேதவாச்சியார்த்தத்தைவிட்டு
நித்தமுமதுநீயாகுநீயதுவாகுமென்னு
மர்த்தமுமகண்டமென்றேயசிபதவைக்கியங்காட்டும். (அக)

வேதாந்தசூளாமணி திருசியவிவேகம்.

முன்னமொழிதருஞ்சோயந்தேவதத்தனென்னுமொழியுண்முதலவனென்னுமொழியிறந்தகாலந்,தன்னில்வருதேசவயோவிசிட்டனாந்தேவதத்தனைக் காட்டிடுமிவனென்மொழிநிகழ்காலத்தி,னுன்னவருமவையுடையதேவதத்தன்றன்னை, யுணர்த்திடு மிவ்விருத்த தருமப்பொருள்களிரண்டு மன்னுதல்செய்யயிக்கமுறுமையினு லப்பொருட்கண் வரு விருத்ததருமங்களைத் தினையும் விட்டே. (கஉக)

விருத்தமறுதருமமாந் தேவதத்தன்றனையே விடாதுகொளினவனிவனே யிவனவனேயென்னுங், தெரித்தலரிதாயதாதான் மியங்கூடுறுமாற்றேரினிதை விட்டுவிடாவிலக்கணையினுடைதா, னருத்தவிலக்கணைபாகத்தியாகவிலக்கணையென் றறைதலினுலிதுவேதத்தொம்மசிவாக்கியத்திற், குரைத்திடுவருதாரணமாயுரியதெனவுண்மையுணர்ந்துடையோரஃதெவ்வாறெனின் முறையேயுரைப்பாம். (கஉஉ)

சிவஞானசுவாமிகள் ஷை சித்தியார் உரையில் அத்துவித சித்தாந்தத்தை மறுத்துத் தமது சித்தாந்தத்தை ஸ்திரப்படுத்தி, அதன் மேல் "அங்ஙன மிடர்ப்பட் டுரைப்பன வெல்லாம் பொரு ளல்ல வென்பார் : பண்டை மறைகளு மது நானேனென்று பாவிக்கச் சொல்லுவ திப்பாவகத்தைக் காணே யென்றார். எனவே, வேதாந்த

மகா வாக்கியமுஞ் சித்தாந்த மகா வாக்கியமும் பொருளானென் றென்பதூஉம் பெறப்பட்டது." எனக் கூறி, வேதாந்தத்திற்கு அத்துவிதிகள் கூறு முறை தவறெனவும், தாம் கூறு முறையே சரி யெனவுங் கூறினர். திருமூல நாயனரோ, ஷை சிவஞான சுவாமிக ளால் மறுக்கப்பட்ட அத்துவித பக்கமே சரியென வேதாந்த தத்துவ மசி வாக்கியத்தினல் விளக்கினர். இதனல் இருவரும் நேர் விரோதி களெனத் தெரிகிறது. இவர் சிவஞான சுவாமிகள் பக்கலில் சேர்ந்து துவித மதமே சரியெனக் கொள்ளுகின்றரா? திருமூல நாயனர் பக்கலில் சேர்ந்து அத்துவிதமே சரியெனக் கொள்ளுகின்றரா? முன் சொன்னவர் பக்கலில் சேர்ந்தால் திருமூல நாயனரை அத்து விதியெனத் தள்ளி யெமது பக்கலில் அவரைச் சேர்த்து விடவேண் டும்; பின் சொன்னவர் பக்கலில் சேர்ந்தால் சிவஞானசுவாமிகளைத் துவிதியெனத் தள்ளி, இவர் அத்துவிதியாக வேண்டும். இவர் அத் துவிதி யாகுங்கால் இவருக்கும் நமக்கும் வழக்கில்லை. வழக்கில்லா மற் போகவே திருமூலரும், இவரும், நாமும் அத்துவிதிக ளாகின் றேம்.

விட்டுவிடாத லக்கணை அத்துவித பக்கமென்பதற்குப் பிரமா ணத்தையும், அதை இவரது மதஸ்தரான சிவஞானசுவாமிக ளிகழ் ந்தாரென்பதற்கு அவரது வாக்கியத்தையும் அவ்வா றிழகப்பட்ட விட்டு விடாதலக்கணையினையே திருமூலர் கூறினரென்பதற்கு அவ ரதுசெய்யுளையும் காட்டி விட்டோமே. இன்னும் நமது ஐயர்க்கு ஐயமேன்? இனியேனும் திருமூல நாயனரையும் திருமந்திரத்தை யும் அத்துவிதிகட்கு ஒப்பி வித்து விடலாமே. இப்போது யாரு டைய சொத்துத் திருமந்திரம்? அது எவரிடத் திருக்க வேண் டுவது? அதைத் திருடியவர் யாவர்? அதினும் இலக் கறியாது திரு டிய திருடர் எவர்? அயலாருடைய சொத்தைத் திருடிக் கொண்டு "அதைக் கொடுக்கமாட்டோம், அது உம்முடைய சொத்தன்று, எம்முடைய சொத்தே" என்று சொல்பவர் இவரா? அத்துவிதி களா? ஐயரவர்கள் பக்ஷபாதத்தை விட்டு நடுநிலையாய் நின்று உண் மையை யுரைத்து, சொத்துடையார்க்குச் சொத்தையொப்பிவித்து, நீதிமானெனப் பெயரெடுத்துக்கொள்வாராக.

## உபநிஷத்துகளும் திருமந்திரமும் ஒரேபொருள்.

"சுகரகசியம், சர்வசார முதலிய ஏகான்ம வாதோபநிடதங்க ளிலே தூலப் பிரகிருதி ராசச சாத்துவிக குணப்பாலராய்த் துவம் பத தற் பதங்களினல் உரைக்கப்படும் காரண காரி யோபாதியராம் சீவேசு வரரை யொழித்துக் கடந்து அசி யென்னும் பதத்தால் ஒரு மையுற அறியப்படும் பிரத்தியக்ஷப் பிரகாசித ஆன்மாவே பிரம மெனப்படும்."

என்று கூறினர்.

காரியோபாதியான சீவனும், காரணோபதியான ஈசனும் கடந்த விடத்துள்ளது பிரமம்; அப்பிரமத்திற்கே சிவ மென்றும், ஆன்மா வென்றும் பேர். அதையே சுகரகசியம் சர்வசார முதலிய வேதோப நிஷத்துகள் கூறுகின்றன.

திருமந்திரம் காரியகாரணோபாதி.

செற்றிடுஞ்சீவவுபாதித்திரனேழும்
பற்றும்பரோபாதியேழும்பசுருரை
யுற்றிடுங்காரியகாரணத்தோடற
வற்றிடவச்சிவமாகுமணுவனே. (க)

ஆறாறுகாரியோபாதியகன்றிட்டு
வேறாயநனவுமிகுத்தகனாநனா
வாறாறகன்றசுழுத்தியதிலெயதாப்
பேறாநிலத்துயிர்தொம்பதம்பேசிலே. (உ)

காரியமேழிற்கலக்குங்கடும்பசு
காரணமேழிற்கலக்கும்பரசிவன்
காரியகாரணங்கற்பனைசொற்பதப்
பாரறும்பாழில்பராபதத்தானே. (ரு)

ஷை பூந்நூரியம்.

அறிவாயசத்தென்னுமாறாறகன்று
செறிவாயமாயைசிதைத்தருளாலே
பிறியாதபேரருளாயிடும்பெற்றி
நெறியானவன்பர்நிலையறிந்தாரே. (சு)

ஷை பாலக்ஷணம்.

பொய்ம்மைச்சகமுண்டபோதவெறும்பாழில்
செம்மைச்சிவமேருசேர்கொடியாகுமே. (அ)

ஷை பராவத்தை.

ஆயும்பொய்மாயையகம்புறமாய்நிற்கும். (எ)

ஐயைந்துமட்டுப்பகுதியுமாயையும்
பொய்கண்டமாமாயைதானும். (உகூ)

இச்செய்யுள்கள் ஷை உபநிஷத்துகட்கொத்துப் பேசியதோடு ஷை காரிய காரண உபாதிகள் கற்பனை யென்றும், முப்பத்தாறு தத்துவங்களான உலகும் மாயையும் பொய்யென்றும் கூறுகின்றன. வேதோபநிஷத்துகளுக்குப் பாஹியரான ஐயர், உபநிஷத்துகளைத் தூஷிக்கப் போய், உபநிஷத்துகளை யாதாரமாய்க் கொண்டு பேச வந்த (தமது சொந்தநூலென மனப்பாலருந்தும்) திருமந்திரத்தையும் தூஷித்தவரானார்.

திருமந்திரம் உபசாந்தம்.

காரியமேழுங்கரந்திடுமாயையுள்
காரணமேழுங்கரக்குங்கடுவெளி
காரியகாரணவாதனைப்பற்றறப்
பாரணவும்முபசாந்தப்பரிசிதே. (உ)

இச்செய்யுளில் காரிய காரணங்கள் வாதனையென்றும், அது பற்றற வேண்டுமென்றும், பற்றற்ற நிலையே உபசாந்த நிலை யென்றும் கூறி யிருப்பதையும், 'காரிய காரணோபாதி' யில் கண்ட வாறு காரியகாரண உபாதிகளான பக்ஷசன் இவை கற்பனை யென்று பேசி யிருப்பதையும் சற்றுக் கவனிப்பாராயின், உபநிஷத் எவ்வளவு பாஹியமோ, அவ்வளவு பாஹியம் திருமந்திரமு மெனக்கருதி, தீயின் கண் ஈயைப்போலத் திருமந்திரத்தின்கண் ஐய ரணுகா ரென்பதற் கையமின்று.

## உபநிஷத்துகளை யிகழ்ந்து தப்புவமை கூறினமை.

"ஈண்டுப் 'பிரமம்' என்றது சென்னை ஆரியனுர் கருத்துற நின்ற ஏகான்ம வாதோபநிடதங்களிலே அசி யென்னும் பதத்தாற் சுட்டப் படுவதும், திருமூல நாயனுரால் துவம்பதத்திறைலே சுட்ட ப்படுவது மாகிய பிரம மெனப்படுஞ் சீவான்மாவினது வியாப்தி யினும் மேலாய் வியாபக முற்ற காரண விசுவப்திப் பரையையே யாமென்க. பிருதிவி வியாபகம், ஆகாயம் வியாப்பியம் என்று ஒரு வன் சொல்லக் கேட்ட மற்றவன் வியாபகம் என்னும் பதம் சமமாய்ப் பிருதிவி ஆகாயம் என்னும் ஈரிடத்தும் சேர்க்கப்பட் டிருத்த லறிந்து, ஆகாய வியாபகத்தையும் பிருதிவி வியாபகத்தையும் பொருளினல் சமத்துவமுடைய தென்றேனும் ஆகாயத்தினும் பிருதிவி வியாபகமுடைய தென்றேனும் கொள்ளாது பிருதிவி வியாபகத்தினும் ஆகாய வியாபகத்தையே தலைமைபடைத்த வியாபகமாமெனக் கொண்டு கருதினுற்போல, 'தன்னை மறைத்தது' பரத்தை மறைத்தது என்னுந் திருமூலர் திருமந்திர மொழியைக் கேட்டபோதும் கண்டபோதும் தனக்கும் (சீவப் பிரமத்துக்கும்) பரத்துக்கும் (பரைக்கும்) சமமாக இசைக்கப்பட்டமை அறிந்து தானகிய பிரமத்தையும் (ஆன்மாவையும்) அதற்கு மேலாய் நின்ற பரையையும் சமப்படுத்திச் சாஸ்திர விரோதமுறப் பரம் என்றது தமது பிரமத்தை உணர்த்தியதாயென்று"

என மற்றொரு விஷயந்தொடுத்தார்.

ஆரியனுர் கருத்துற நின்றனவாகிய நூற்றெட்டு உபநிஷத்துகளும் ஏகான்ம உபநிஷத்துகளேயாம். ஏகான்ம உபநிஷத்தென்று சொல்லிக் கொள்வது வைதிகர்க்குப் பெருமையினும் பெருமை! மிகப் பெருமை !! வேத பாஹியர்களான அவைதிகர்களுக்கோ அது

சிறுமையிலுஞ் சிறுமை! மிகச்சிறுமை!! ஆன்மாவென்பது பிரமம், அல்லது சிவம், அல்லது கடவுளுக்குப் பெயராக வேதாதிகள் சொல்வதாலும், அப்படிப்பட்ட கடவுள் ஒன்றே யாதலாலும், அக்கடவுளை யொன்றெனச் சொல்லுமாறு ஏகான்மாவென்று சொல்வது வேத முதலிய பதினான்கு வித்தைகட்குஞ் சம்மதமானதினாலும் அதை வாதிக்கும் உபநிஷத்துகள் ஏகாத்துமவாத உபநிஷத்துகளேயாம்.

இதை யங்கீகரிக்காத வேதப் புறச் சமய அவைதிக பாஷாண்டிகள், தமது பாஷாண்டத் தன்மைக்கொப்ப, பிரமத்துக்கு ஆன்ம பதத்தை யுபயோகிக்க அஞ்சி, ஜீவான்மாவுக்கே உபயோகிக்கின்றார்கள். இதோடு இவ்வாறு வேதாந்திகள் சொல்லவில்லையென அவர்களைத் தூஷிக்கவும் போகின்றார்கள். துவம்பத தற்பத வாக்கியங்களான ஜீவேசர்க்கு மேல்பட்டிருக்கின்றதும், காரணகாரிய ரகிதமானதும், சத்து சித்து ஆநந்த நித்திய பரிபூரணமானதும், நிச்சல நிர்விகார நிராதார நிஷ்கள நிர்க்குண நிர்த்தொந்த நிர்விசேஷ முதலிய அதீத இலக்கண முள்ளதுமான பொருளுக்கே ஆன்மாவென உபநிஷத்துகளெல்லாம்சொல்ல, அப்பொருளைக் கிஞ்சிஞ்ஞத்துவமும், ஜநந மரணத்துவமும், அஞ்ஞானத்துவமும், அநித்தியத்துவமும், பந்தத்துவமும் இன்னு மிவ்வித இழி குண முள்ள ஜீவனென இவ்வையர் சொல்வது தகுதியாமா? இவ்விதத் தகுதியின்மையைக் காட்டித் தானா அத்துவிதத்தை வென்று துவிதக் கொடி போடவேண்டும்! யதார்த்த அருத்தத்தைச் சொல்லி அத்துவிதத்தை வெல்ல ஐயராலாகாதோ! இதைப்பற்றி ஒரு நூலா? இரு நூலா? மூன் நூலா? எத்தனை நூல்களால் இம்மதஸ்தரது மாறுபாட்டினைக் கண்ணாடிபோல் விளக்கிக் காட்டி ஷை விஷயம் மறுக்கப்பட்டது? அதற்கு ஏதும் பதில் கூறாது எத்தனையோ நாளாய்க் கேட்டுக் கேட்டுப் பதில்பெற்ற பூர்வபக்ஷதோல்வி விஷயத்தை யிப்போதுங் கேட்பது வெற்றியாமா? இது விஷயமாகப் பூர்வ பக்ஷிகட்கே நாண மில்லாவிடில் யாம் செய்வ தென்ன விருக்கின்றது!

இவரது ஷை வாக்கியத்தில் சீவான்மா வியாப்தி யென்றும் அதைவிட மேலாய விசுவப்தி பரை வியாபக மென்றுங் கூறி, சீவான்மாவுக்குப் பிருதிவினையும், விசுவப்தி பரைக்கு ஆகாயத்தினையு முவமானமாகக் கூறினாரன்றோ? இவ்வுவமானங் கூறுவோர் அத்வைதிகளே யன்றி இவர் மதத்தின ரன்று. இவரது சிவஞான சுவாமிகள் சிவஞானபோதச் சிற்றுரையில் ஜீவான்மாவைப் பற்றிப் பேசுங்கால்

"முதல்வன்போல் ஐந்தொழிற்கும் வினைமுதலாம் உரிமையின்றிச் சிவானுபவ மொன்றினுக்கே யுரித்தாயவாறும், சமவியாபக மாயினும் முதல்வனை நோக்கத் தூலவறிவாகலான்".

என்று கூறி யிருப்பதே போதியதாம். இதனால் சிவனைப் போலச் சீவான்மாவும் சமவியாபக மாகின்றது. இவர் பரமென்ற சொல்லுக்குப் பரையெனப் பொருள் கொள்ளினும் அது சிவத்தின் குணமாகலின் சிவ வியாபகமே பரை வியாபகமாம்; குணகுணி யேற்றக் குறை வல்லாமையானென்க. ஷை சிவஞான சுவாமிகளின் வாக்குப் படிச் சீவான்மாவும் சிவத்துக்குச் சமானமான வியாபகமேயாம். இங்ஙனமாகச் சிவத்துக்கு ஆகாயமும், ஜீவான்மாவுக்குப் பிருதிவியுமாகத் தப்புவமானங் கூறுகின்றார். எவ்வாற்றானும் வியாபகங் கூறாது

திருமந்திரம் சீவன்.

மேவியசீவன்வடிவதுசொல்லிடில்
கோவின் மயிரொன் றுநூறுடன் கூறிட்டு
மேவியகூறதுவாயிரமாயினால்
ஆவியின் கூறு நூறாயிரத்தொன்றே. (க)

இச் செய்யுளின் பிரகாரம் ஜீவான்மாவை அணு வென்று கூறும் திருமூலநாயனார் மதத்திற்கு விரோதமாக, பிரமத்தைப் போலச் சீவான்மாவுக்கு வியாபகஞ் சொல்லு மிப் பூர்வ பக்ஷியார்: ஆகாய பிருதிவி உவமானங் கூறுவது பொருந்துமா? ஆகாயம் எங்கும் நிறைந்த பூரணமும், பிருதிவி ஏகதேச அவ் வியாபக கண்டமுமாம். இவர் தம் மத விரோதமாகப் பேசி விட்டு உவமேயத்தின் படி மேற்படி உவமானத்தைக் கைக்கொள்ளும் அத்துவிதிகளின் பேரில் இல்லாச் குற்றத்தைக் கற்பித்துக் கூறுதல் குணமுடையார்க்கு அழகாமா? அத்துவிதிகள் பிரமமான ஆன்மாவைப் பரிபூரணமென்றும், பசுவாகிய ஜீவான்மாவை ஏகதேசமென்றுங் கூறுகின்றமையின், இவர் கூறுங் குற்றம் அத்துவிதிகளின் பேரில் சாராது; இவர் பேரிலே சாருமென்க. திருமந்திரம் சிவனை வியாபகமென்றும் ஜீவனை யேக தேச மென்றும் கூறுகின்றமையின் அந் நூல் அத்துவிதிகளுக்கே யுரியது; அதற்கு மாறாக கூறுவதால் இவர்க்கு அது உரிமையின்றென்க. ஷை உவமானம் மற்றொரு வகையினும் ஐயர்க்குத் தீங்காய் முடிவதை விளக்குவாம். ஆகாயஸ்தானத்தில் பிரமத்தை வைக்கின்றார்; பிருதுவி ஸ்தானத்தில் ஜீவான்மாவை வைக்கின்றார். ஆகாயங் காரணம், பிருதிவி காரியம். காரண முண்மை யெனவும், காரியம் உண்மைப் போலியெனவும் சுருதிவாயிலாகவும் யுக்தி அனுபவ வாயிலாகவும் இதுகாறும் பன்முறை தெரியப்படுத்தி யிருக்கின்றோம். அதன் பிரகாரமே இதனை யுவமேயமாகக் கொண்ட பிரமம் உண்மையும், ஜீவான்மா உண்மைப் போலியுமாம். இது இவரது துவித மதத்திற்கு விரோதமும், அத்துவித மதத்திற்கு அவிரோதமுமாம். இத்தகைய உவமானத்தை அத்துவிதிகளுக்கே யெடுத்துக் காட்ட வரல், அடிக்க வருவோனுக்கு ஆளுதவி செய்யதற்கினமாமென்க.

சைவ பாஷியக்காரரான நீலகண்டாசாரியர் ஜீவான்மாவை வியாபகமென்று சொல்வதில்லை; அணுவென்கிறார். இவர் மதமோ வியாபக மென்று சொல்லுகிறது; அதினும் பிரமத்தைப் போல வியாபக மென்று சொல்லுகிறது. ஜீவான்மாவை வியாபக மென்று சொல்பவர் சைவ ரல்லாத நையாயிகரும், சாங்கியரு மாம். அதனால் இவர் சைவ பாஷியக் காரருக்கு விரோதி யாய்ச் சாங்கிய நையாயிக மதஸ்தரு ளொருவராய் அசைவ ராகின்றார். ஷை சர்வசார முதலிய சகல உபநிஷத்துகளும் சீவான்மாவை வியாபக மென்று சொல்லவில்லை. ஜீவேசுவரர்க்கு வேறான பிரமத்தை அல்லது அதற்கு மற்றொரு பெயரான சிவத்தை அல்லது அதற்கு மற்றொரு பெயரான ஆன்மாவை வியாபகமென்று சொல்லுகிறது. ஆகலின் ஒரு வகைப் பட்ட சித்தாந்திகளா யுள்ள நையாயிகர், சாங்கியர், மாயாவாத த்ராவித தாந்திரிக சைவ ராகிய இவர் மூவரும் ஷை உப நிஷத் பாஷியர்களாம். இங்ஙனமாகச் சாங்கியமதவிரோதமான சர்வ சாராதியுப நிஷத்துகளைச் சாங்கியமாதி யுபநிஷத்துக ளென்று சொல்வது நியாய மாமோ! ஜீவான்மாவைச் சிவனைப்போல் வியாபக மென்று கூறும் உபநிஷத்துகள் ஒன்றும் இல்லாமையால் அவ்வாறு கூறும் இவர் மதமும், சாங்கிய மதமும், நையாயிக மதமும் அநாதரணீய மதங்களா மென்க. உபநிஷத் முதலிய எவ்வித வைதிக நூல்களுக்குங் கட்டுப் படாத இவ்வையர்: அவற்றினுக்குக் கட்டுப்பட்டுப் பேசும் திரு மந்திரத்தைத் தம் நூலெனக் கொள்வது நகைப்பிற் கிடமாம்! ஷை உவமான உவமேயங்களைப் பற்றி 'சங்கராசாரியர் அவதார மகிமை' 'சித்தாந்திகளு மேகாத்தும வாதிகளே' 'அத்துவித தூஷண பரிகாரம்' 'அத்துவித உண்மை' 'அவைதிக சைவசண்ட மாருதம்' முதலிய நூல்கள் வெகு விரிவாய்ப் பேசியிருக்கின்றமையான் இவ்விடத்தில் அதிகம் பேசாது விட்டனமென் றறிக.

திரு மந்திரத்தில் தன்னை மறைத்த தென்பதற்கு மகாகாசத்தினோர் பாகமான கடாகாசத்தை யுவமானமாகக் கொண்ட சகலத்தனையும், பரத்தை மறைத்த தென்பதற்கு மகாகாசத்தை யுவமானமாகக் கொண்ட பிரமத்தையும் பொரு ளாகக் கொண்டால், சகல வேத ஸ்மிருதி புராண இதிகாசாதிகளும், திருமந்திரமும் ஒரு பொருள்கொண்டு முடிவனவாமென விளங்கும். இவ்விஷயம் 'பேதவாத திரஸ்காரம்' 20, 21, 22 ம் பக்கங்களிலுங் காண்க. ஐயர் வேத பாஹிய அவைதிகத் தன்மையால் பொருள் கொள்ளத் தெரியாது மயங்குகின்றார். ஜன்மாந்திரத்தில் வேத சாஸ்திராதிகளைத் தூஷித்த தீய கருமத்தினால் எத்தனை முறை எத்தனை நூல்களின் வாயிலாக எத்தனைவகையாய்ச் சொல்லினும் புத்தியில் படுகிறதில்லை. அதற்காக அறிஞர் அனுதாபப்படுவ தல்லது மற்றப்படிச் செய்வ தியாதுளது!

## எல்லாத் தத்துவங்களுடைய முடிவும் அத்துவிதமே.

இனிவரும் ஐயர் வாக்கியத்தைக் கவனிப்பாம்:—

"இந்தச் சீவ பர சிவங்களுக்குச் சூத கீதை சொல்லியவாறு வேதாந்தியாருடைய ஞானேந்திரியமைந்து, கன்மேந்திரியமைந்து, சப்தாதி யைந்து, பூதாதி யைந்து, வாயுப் பத்து, அந்தக் கரண நான்கு, அவித்தை ஒன்று, சீவ னென்றுமாகச் சேர்ந்து முப்பத்தாறாக விரிக்கப் பட்டும் தூலப் பிரகிருதி ஆன்மதத்துவ மிருபத்து நான்கின்பாற் படாது, அதினின் உயர்ந்த வித்தியாதத்துவ மேழினு முயர்ந்த சிவதத்துவ மைந்தின் அதீதத்திலே ஐக்கியம் பேசப் படுவனவா மென்றும், இவைகளுக்குச் சாக்கிர சாக்கிர முதல் சிவ தரிசன மீறும் பராவஸ்தை திருமூலநாயனாரால் சிவாகமத்தினின்று வேறு படாது உரைக்கப்பட்டதா மென்றும், இருபத் தைந்தாந் தத்துவமாகிய காரணப் பகுதியையும் (பிரகிருதியையும்,) காரண அசுத்தமாயையும் (மாயையையும்,) காரண சுத்த மாயையையும் (மாமாயையையும்) ஆன்மாவாகிய புருஷன் யோக மார்க்கத்தில் கண்டு நீங்கிப் பஞ்ச மலங்களையும் எய்து அறுக்கு மாறு, எல்லா மாயும் அல்லவாயுமாய் உய்யச்செய்யும் உன்மனை பற்றிய சாக்கிர சாக்கிரமுதற் சிவதரிசன மீறாகிய பத்து அவஸ்தையாம் பராவஸ்தா நிராலம்பத்தினால் சாயுச்சிய மடைதல் சுத்தமாம் என்ற கருத்தினாலே திருமூல நாயனார்,

ஐயைந்துமட்டிப்பகுதியுமாயையும்
பொய்கண்டமாமாயைதானும்புருடன்கண்
டெய்யும்படியாயெவற்றுமாயன்றாகி
யுய்யும்பராவத்தையுள்ளுறல்சுத்தமே.

என்றும், உயிரும் (அருளாம்) பரமும், நேயமும் உபாதியெல்லாம் ஒழியவொன்றாய் அதக் வசிகை முடிபு கொண்டு மருவும் என்ற கருத்தினால் பராவஸ்தை இறுதி இருபத் தேழாம் செய்யுளால்,

நின்றானருளும்பரமுமுன்னேயமு
மொன்றாய்மருவுமுருவுமுபாதியுஞ்
சென்றானெனவிடுத்தாங்கிற்செல்லாமையு
நன்றானஞானத்தினாதப்பிராணனே.

என்றருளினார். மேலே கூறியவாற்றால் தமது தத்துவங்களுட் பேசப்படாது யெலாம் பாசுபதப் பிரசாத யோக மார்க்கத்துப் பராவஸ்தையிற் பரையையாற்றுப் பரமென்று கூறப்பட்ட பதச் செய்யுளில் 'மரத்தை மறைத்தது' என்பது தமது 'பொன்னை மறைத்தது' என்பதுபோ லிருக்கக் கண்டு, இலக் கறியாது திருடப் பட்ட நமது திருமந்திரச் செய்யுட் சொத்தை அத்திரு மூலர் பிரமாணச்

சாட்சியச் செய்யுள்கள் வாயிலாக நம் பக்கமுறப் பொருள் செய்து மீட்டுக் கொண்டேம்''

என்றார்.

சூத கீதை யானது ஞானேந்திரியம் ஐந்து, கன் மேந்திரியம் ஐந்து, சத்தாதி ஐந்து, பூதாதி யைந்து, வாயுப் பத்து, அந்தக் கரணம் நான்கு, அவித்தை ஒன்று, ஜீவனொன்று ஆக முப்பத்தாறுகத் தத்துவத்தைக் கூறிற்று; அதன் மேல் சிவனையுஞ் சொல்லிற்று. இதை வேதாந்தியாருடைய தத்துவ மென்று கூறினார் ஐயர். இவ் வேதாந்த தத்துவத்தைச் சூத சங்கிதை கூறினதால் அது இவர்க் குடம்பா டன் றென்ப தாயிற்று. இதற்கு மேல் ஆகம தத்துவத் தைச் சொல்லி, அது வேதாந்த தத்துவத்திற்கு மேற்பட்டதென்று கூறுகின்றார். அத்தத்துவமாவன:—பூதம் ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, அந்தக் கரணம் நான்கு ஆக விருபத்து நான்கும் ஆன்ம தத்துவங்கள். காலம், நியதி, கலை, வித்தை, ராகம், புருடன், மாயை ஆக ஏழும் வித்தியா தத்துவங்கள்; சுத்த வித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி, சிவம் ஆக ஐந்தும் சிவ தத்துவங்கள். ஆக இம் முப்பத்தாறு தத்துவங்க ளுக்குமேல் அதீத சிவம் இவ்விருவகைப் பட்ட தத்துவங்களிலும் இவ்வாதத்திற் கத்தியாவ சியகமான பரமாத்துமா ஜீவாத்துமாக்கள் வந்து விட்டன. முன் சொன்னது வைதிகம், பின்சொன்னது தாந்தி ரிகம். அநாவசியகமான சில தத்துவங்கள் ஏற்றக் குறைச்சலாயிருத் தலால் பய னேது மில்லை. வேதமும் ஒரு இடத்தில் தத்துவத்தைச் சுருக்கியும், ஒரு இடத்தில் விரித்தும் கூறுகின்றது. வராகோப நிஷத்து முதலத்தியாயத்தில்

"சிலவாதிகள் தத்துவம் இருபத்து நான் கென்றும், சிலர் முப்பத்தாறு என்றும், பின்னுஞ் சிலர் தொண்ணூற்று றென்றும் சொல்லுகிறார்கள்."

என்று கூறி யிருக்கிறது. ஐயர், பயன் படும் ரச மான வார்த் தையைப் பற்றிப் பேசாது பயனில்லா ரச மற்ற சொல்லைக் கட்டிக் கொண்டு மல்லாடுகின்றார். பய னுள்ளதில் இவரது வாதத்திற்குப் பலனில்லாது போகவே, பய னற்றதில் நுழைந்து நீரின்றிச் சந்த னம் அரைப்பதுபோல் பேசி விழலராகின்றார். துவிதிகளின் கொள் கை இரு பொருள் உண்மையா யுண் டென்பது; அத்துவிதிகளின் கொள்கை ஒருபொருளே உண்மையா யுண்டென்பது. மற்ற ஏற்றக் குறைச்சலான தத்துவங்கள் இவ்வாதத்திற்கு அநாவசியகம். இவ ரது ஷை வாக்கியத்தில் சூதசங்கிதை தத்துவத்தினும் (சிவாகமத்திற் கூறப்படும்) வித்தியா தத்துவம் மேலென்றும் அதன்மேல் சிவ தத் துவ மென்றுங் கூறுகின்றார். வேதாந்த தத்துவத்தினும் தாந்திரிக தத்துவ மேலெனற்குக் காரணம் இவ ரிட முள்ள வேதத் துவேஷ

மேயன்றி வேறொன்றுமின்று. ஷை சூத சங்கிதை பரம விஞ்ஞான முரைத்த அத்தியாயத்திற் கூறிய

"முன்னுமவித்தையாற்பசுபேதமும்மொய்வலியமாயையால்
பன்னுபரதத்துவபேதமுங்கற்பிக்கபபட்டது" (௬)

இச்செய்யுளையும், ஷை வராகோபநிஷத்தின் தொண்ணூற்றாறு தத்துவங்களையும் வைத்துப் பார்த்தால் வேதத் துவேஷ மிவரை விட்டொழியும். வேத தத்துவத்திற்கு மாறாக எங்கேனும் கூறு மானால் அது பிரமாண மன்று; பிரமாணமாகச் சொல்ல வேண்டு மாயின் அதை வைதிகத்தி லடக்கி, "இது வைதிக விரோத மன்று" என்று சொல்ல வேண்டும். அஃதை விட்டு வைதிகத்துக்கு மேற்பட்டது தாந்திரிக தத்துவ மென்றும், அதனால் வேதத்தினும் தாந்திரிகம் மேற்பட்ட தென்றும் சொல்வது வேத விரோதிகள் கூற்று. விரலுக்குத் தக்கபடி மோதிரஞ் செய்வதைவிட்டு, மோதிரத்துக்குத்தக்கவாறு விரலைச் சீவுவான் போன்று

இவர் ஏற்பட்டனர். இதனால் இவ்வையரது வைதிகத் தன்மை கண்ணாடிபோல் துலக்கமாய்ப் பிரகாசிக்கின்றமை காண்க. திருமூலர் எத்தனை தத்துவஞ் சொல்லினும்.

சூதசங்கிதை சூதகீதை பரமவிஞ்ஞானம்.

சச்சிதானந்தரூபனுயுந்தாமரையோன்செய்து
வைச்சடல்லுலகந்தட்கும்வயங்குறுகருத்தாவாயு
நச்சியபசுபாசங்கடமக்குவேறாயுநாளு
முச்சமேயடைந்துநிற்போன்பரசிவனொருவனோர்மின். (௨)

வான்முதற்பூதங்களைந்துமற்றவற்றின்குணமைந்தும்
ஞானவிந்திரியமைந்துநவில்கன்மேந்திரியமைந்தும்
பான்மையுறுவாயுவொருபத்துமனாதிகணன்கு
மானவிவைகட்குக்காரணமானவவித்தையொன்றும். (௩)

ஆனவிம்முப்பானைந்தற்சப்படுப்பட்டவன்பசுவே
யீனமிலாப்பரசிவனிப்பசுவினுக்குவேறானோன்
மானமிலாப்பசுக்களுக்குமருவியுளகனாதியே
தானமெனவஞ்ஞானஞ்சமுசாரபீசமதே. (௪)

கருளொளியாற்கழிவதுபோற்கதிர்த்தசிவஞானத்தான்
மருளுறுமாணங்கழியுமற்றந்தவஞ்ஞான
மிருளவித்தைமாயையெனவீருருவமாயிருக்குந்
தெருள்படைத்துமேலாய்திறத்தூறநின்றீரவற்றுள். (௫)

முன்னுமவித்தையாற்பசுபேதமுமொய்வலியமாயையால்
பன்னுபரதத்துவபேதமுங்கற்பிக்கப்பட்டதுவான்
மன்னுதேகேந்திரியாதிவாசனபேதத்தாலே
பின்னுபேதமாமவித்தைபேசுபசுபேதத்திற்கும். (௬)

இச்செய்யுள்கள் சகல தத்துவங்களும் கற்பனை யென்றும் சிவனொருவனே யுண்மையென்றுங் கூறியவாறு

திருமந்திரம் காரியகாரணோபாதி.

காரியமேழிற்கலக்குங்கடும்பசு.
காரணமேழிற்கலக்கும்பரசிவன்
காரியகாரணங்கற்பனைசொற்பதப்
பாரறும்பாழில்பராபரத்தானே. (ரு)

ஷை முத்துரியம்.

அறிவாயசத்தென்னுமர்ரூறகன்று
செறிவாயமாயைசிதைத்தருளாலே
பிறியாதபேரருளாயிடும்பெற்றி
நெறியானவன்பர்நிலையறிந்தாரே. (சு)

ஷைபரலக்ஷணம்.

பொய்ம்மைச்சகமுண்டபோதவெறும்பாழில். (சு)

ஷை பராவத்தை.

ஆயும்பொய்மாயையகம்புறமாய்நிற்கும். (எ)

பொய்கண்டமாமாயை. (உசு)

ஷை சம்பிரதாயம்.

நானெனநீயெனவேறில்லை. (கக)

ஷை நின்மலாவத்தை.

தானேசிவமானதன்மைதலைப்பட. (கக)

தன்னையறிவதறிவாமஃதன்றிப்
பின்னையறிவதுபேயறிவாமே. (கரு)

ஷை சிவரூபதரிசனம்.

உணர்வுமவனேயுயிருமவனே. (உ)

திருமந்திரத்தின் இச்செய்யுள்களும் சிவமொன்றே மெய்யென்றும், மற்றச் சீவேசமாயை உலகங்களெல்லாம் கற்பிதமென்றுங் கூறுவதாலும்,

திருமந்திரம் தோத்திரம்.

சிவன்ஒன்பலபலசீவனுமாகி
நவின்றுறுலகுறுநம்பனுமாமே. (௩0)

ஷை திதி.

உடலாயுயிராயுலகமதாகிக்
கடலாய்க்கார்முகில்நீர்பொழிவானாய்
இடையாயுலப்பிலியெங்குந்தானாகி
யடையார்பெருவிழியண்ணல்நின்றானே. (௩)

ஷை சிவரூபதரிசனம்.

உணர்வுமவனேயுயிருமவனே. (௨)

ஷை முச்சூனியம் தொந்தத்தசி.

சீவன்பரசிவனுமே. (௬)

ஷை பாவத்தை:

இவனும்அவன் வடிவாமே. (௯)

ஷை சம்பிரதாயம்.

நானென்னநீயென்னவேறில்லை. (௧௧)

இச்செய்யுள்கள் உபக்கிரம உபசங்கார மிரண்டினும் சிவமான வொரு பொருளே யுண்மைப் பொருளெனச் சித்தாந்தஞ் செய்வதாலும்; வைதிக தத்துவஞ்சொன்ன சூதசங்கிதையும், ஆகம தத்துவஞ் சொன்ன திருமந்திரமும் ஒரே பொருள் கொண்டு அதாவது அத்துவிதப் பொருள் கொண்டு முடிவதாலும் திருமூலர் கருத்து வேதத்தின் முடிபுமாத்திர மன்று, ஆகமத்தின் முடிபும் அத்துவிதமென்றே தீர்மானமா மென்க.

திருமூலர் வேதத்தின் பக்கலில் நின்று பேசிய விடத்தும், சிவாகமத்தின் பக்கலில் நின்று பேசிய விடத்தும் துவித தொம்சஞ் செய்து, தமது அத்துவித பக்கத்தையே நிலைநிறுத்தி யிருக்கின்றாராகலின், இத்தகைய அத்துவித சிரேஷ்டரைத் துவிதி யெனச் சொல்வது அறியாமையினும் மிகு அறியாமையாம்!

## ஐக்கியவிசாரணை.

ஐயர் 'சிவ தத்துவமைந்தின் அதீதத்திலே ஐக்கியம் பேசப்படுவனவாம்' என்பதன் பொருளை விளக்காது இரகசியமாகவே வைத்தனர். ஐக்கிய மென்பதன் பொருள் ஒன்றாந்தன்மை. 'அதீதத்திலே ஐக்கியம்' என்பது சிவமொன்று மாத்திரமிருந்து ஒன்றெனச் சொல்லப்படுகிறதா? சிவமும் உயிருஞ் சேர்ந்து ஒன்றெனச் சொல்லப்படுகிறதா? சிவமொன்று மாத்திர மிருந்து ஒன்றென்று சொல்லப்படுகிறதென்னின், அங்ஙனமாயின் சிவத்த்துவத்தின் அந்தர்க்கதத்தில் பலவென்று சொல்ல வேண்டும். இதனால் ஒரே பொருள் சிவ தத்துவத்தின் அதீதத்தில் ஒன்றென்றும், அந்தர்க்கதத்தில் பலவென்றும் சொல்லப் படுதல்வேண்டும். இவ்வாறு சொல்லின் இது பெரிய ஆசங்கைக் கிடனாம். ஒன்று பல வாகுமாயின் ஒன்று காரணமும், பல காரியமு மாதல் வேண்டும். காரண காரிய மாகுங்கால் பரிணாமத்தில் அமைத்துச் சொல்லலாமா? ஆரம்பத்தில் அமைத்துச் சொல்லலாமா? விவர்த்தத்தில் அமைத்துச் சொல்லலாமா? பரிணாமத்தில் அமைத்துச் சொல்லின் இதற்குவமானம் பால் தயிர். இதை

யாராயின் பால் கெட்டுத் தயிராதல்போல ஒன்ருகிய சிவங்கெட்டுப் பலவாதல் வேண்டும். தயிராகுங்கால் பாலில்லாது போதல் போலப் பல வாகுங்கால் சிவ மில்லாதது போதல் வேண்டும். பலவாத லேனு முளதோ வென்னின் பலவென்னுந் தானத்தில் தயிர் இருப்ப தால் தயிர் தயிராகவே யிராது, அதுவுங் கெட்டு மற்ருென்றும் அதுவும் கெட்டு மற்ருென்று மாகி, முடிவில் இன்ன நிலைமைத் தெனச் சொல்ல முடியாமற் போம்; அது போல உவமேயத்திலும் பலவுங் கெட்டு மற்ருென்றும் அதுவுங் கெட்டு மற்ருென்றும் அதுவுங் கெட்டு மற்ருென்று மாகி முடிவில் சிவத்தின் நிலைமை இன்ன தெனச் சொல்ல முடியாமற் போம். இதனுல் அநவத்தா தோடத் திற் கிடனுய்க் குற்றப்படு மென்க. இதுதான் பரிணும வாதத்தின் பயன். இனி ஆரம்பத்தைப் பற்றி விசாரிப்பாம். இதற் குவமானம் நூலாடை. இதுவுந் தோஷமாய் முடிகிறது. யாங்ஙன மென்னின் நூலைத் தவிர ஆடைக்குப் பொரு ளில்லாமை போலவும், நூல்மெய் யும் ஆடை பொய்யுமாதல் போலவும், நூலின்கண் ஆடை சொல்மாத் திரமும் தோற்றல் மாத்திரமு மாதல் போலவும் ஒன்ருகிய சிவத்தை த் தவிரப் பலவென்பதற்குப் பொருளில்லையாய், சிவமென்பது மெய்யும் பல வென்பது பொய்யுமாய், சிவத்தினிடத்துப் பலவென்பது சொல் மாத்திரமும் தோற்றல் மாத்திரமுமாய் முடியும். இனி விவர்த்த உவமானத்தை ஆராய்வாம். இதற் குவமானம் கயிற்றரவு. கயிற்றின் கண் அரவு பொய்யாதல் போல ஒன்ருகிய சிவத்தின் கண் பல வென்பது அதாவது சுத்த வித்தை, ஈசுவரம், சாதாக்கியம், சத்தி, சிவம் இவை பொய்யாம். கயிற்றின் கண் அரவு தோன்றுங் காலத்திலேயே அரவு எப்படிப் பொய்யோ, அப்படியே சிவத்தின் கண் பல வென்பது தோன்றுங் காலத்திலேயே பொய்யாம். கயிற்றின் கண் அரவு முன்பின் இடை ஆகிய முக்காலங்களிலும் பொய்; அங்ஙனமே ஒன்ருகிய சிவத்தின்கண் பல வென்பது முன் பின் இடை ஆகிய முக்காலத்தும் பொய்யாம். இனிச் சிவமும் உயிரும் ஒன்றென்று சொல்லி ஒன்றெனப்படுகிற தென்னின் இரண்டு பொருள் இரண்டு பொரு ளாகுமே யன்றி ஒன்ருத லெங்குமில்லை. க் என்ற மெய்யெழுத்தும், அ என்ற உயிரெழுத்தும் சேர்ந்து, க என்ற ஒரு எழுத் தாதல்போல் அதாவது உயிர் மெய்யெழுத் தாதல்போல, க் என்ற இடத்தில் ஜீவான்மாவையும், அ என்ற இடத்தில் சிவத்தையும், க என்ற இடத்தில் ஐக்கியத்தையும் வைத்துச் சொல்லப்படுகிறதென் னின் இதன் மறுப்புத் "திருவள்ளுவர் முதற்குறள்" என்னும் சிறு நூலில் மிகத் தெளிவாய் வெளிவந்திருக்கிறது. அதனைப் பார்த்திருப்பாராகலின், மறுக்கப்பட்ட அபூர்வ பக்கத்தினைப் பேசமாட்டார் ஐயரென்பதாம்.

'சிவ தத்துவ மைந்தின் அதீதத்திலே' என்றதில் பின்னும் ஆக்ஷேப மில்லாது போக வில்லை. அதீத சிவம்: சிவ தத்துவம் ஐந்

தும் சத்தா யிருக்க அதீதமா? அசத்தா யிருக்க அதீதமா? சதசத்தா யிருக்க அதீதமா? சத்தாயிருக்க அதீதமென்னின் அப்போது அதீதப்பிரமம் அபரிபூரண தோஷத்தைப் பெறுகின்றது. அசத்தாயிருக்க அதீதமென்னின் இவர் மதத்தில் யாவுஞ் சத்தென்று கூறப்படுகின்றமையின், ஐயர்க்கு அது சரிப்படாது. இவரது மதஸ்தரான சிவஞான சுவாமிகளும் சிவஞான சித்தி முதற் சூத்திரம் ஆறாவது செய்யுளின் உரையில் "காரணங் காரியம் உள் பொருளேயாய்" என்று கூறுகின்ற மையின், அசத் தென்னும் சொல் இவர் மதத்துக்குப் பொருந்தவே மாட்டாது. சதசத் தென்றேனும் சொல்லலாமே யெனின் ஷை இரு வித தோஷமும்வந்து ஏறும். அன்றி நேர் மறுதலையான இருவித இலக்கணம் ஒருபொருளின்கணிருத்தல் அமையாது. ஷை சிவஞான சுவாமிகளும் கவுள மதவாதியை மறுக்குங்கால் "மறுதலைப்பட்ட இரண்டு தன்மை ஒரு பொருட் கின்மை யானும்" என்று கூறி யிருக்கின்றார். ஆதலால் சதசத்தென்றுங் கூற லொண்ணாது. இதனால் அதீதத்தில் ஐக்கியமென்பது எவ்வாற்றானும் அதாவது சிவமாத்திரம் ஐக்கியமென்றாலும், சிவமும் உயிருஞ் சேர்ந்து ஐக்கிய மென்றாலும் பொருந்தாதென இனி ஐயர் அறியக்கடவர். மாயாசம்பந்தமான துவிதியா யிருந்து 'அதீதத்தில் ஐக்கியம்' என்று சொல்வதில் இவ்வளவு தவறுக ளிருப்பதால் இந்தத் தவறை யொப்புக்கொண்டு, இனி யவ்வாறு சொல்வ தில்லையென வுறுதிமொழி பகர்வாராக.

சபாபதி நாவலர் கக்ஷியைத் தாபிக்க வந்த ஐயர், இவ்வளவு பேசியும் பொய் மெய்யை மறையாதென்றும், உவமானத்தில் யானை மெய் யென்றும், அங்ஙனமே உவமேயத்தில் பார்முதல் பூதம் அல்லது மாயை மெய்யென்றும் பிரஸ்தாபத்தி லிருக்கும் திருமந்திரத்தைக் கொண்டேனும், அல்லது சுருதி ஸ்மிருதி புராணேதிகாசங்களைக் கொண்டேனும் தாபித்தனரில்லை. தாபிக்காமையின் மெய்யைப் பொய் மறைக்கு மென்றும், அதற் குவமானம் மரத்தை யானை மறைத்ததென்றும், இவ்வுவமானத்திற் குவமேயம் மெய்யான பிரமத்தைப் பொய்யான மாயை அல்லது பார் முதல் பூதம் மறைக்குமென்றும் ஒத்துக் கொண்டவ ரானார், ஒத்துக்கொண்டவ ராகவே, துவிதமதம் சுருதியுக்தி அனுபவ விரோதமென்று தள்ளி, அத்துவித மதம்மெய்யென்று ஏற்றுக் கொண்டவரானார். காரியத்தி லிவ்வாறாயினும் வீண்வழக்கிற் புகுந்து வீண் விதண்டாவாதம் செய்யாது விடுகின்றாரில்லை. இதனால் இவரது வாதம் எடுத்த தொன்று, பேசிய தொன்று, முடித்துக் கொண்டதொன்றுமாய் முடிந்த தென்பதாம்.

## பயனற்ற பிரமாணங்கள்.

திருமந்திரம் தம்பக்கத்து நாலெனற்கு ஐயர் காட்டும் நியாயங்களை யின்னும் பரிசோதிப்பாம். இதுவிஷயமாக அவர் கூறுவதைப்

"பூர்வபக்ஷம்" என்றும், யாம் மறுப்பதைச் "சித்தாந்தம்" என்றும் பெயர் கொடுத்து எழுதுவாம்.

### பூர்வபக்ஷம்.

"அறுபதின் மும்மைச் சிவபக்தர்களுள்ளே ஒருவராகப் பேசப்பட்டிருப்பவராக அறியக்கிடந்த (சிவபெருமான் உமாதேவியார்க் கருளிய) சிவரகசியத்திலும்,"

### சித்தாந்தம்.

இதில் இவருக்குத் துவிதஞ் சித்தித்த தென்னை ? அத்துவிதஞ் சித்தியாமற் போன தென்னை ? உமா தேவியாருக்குப் பரம சிவன் உபதேசித்ததினால் துவிதமெனக்கொண்டாராக்கும்; பரமசிவனுக்கு உமா தேவியார் உபதேசித்திருந்தால் அங்ஙனங் கொள்ளா ராக்கும்; அதோடு சிவ ரகசியத்திற் பேசப்பட்ட மை பற்றித் துவித மெனக் கொண்டாராக்கும்; விஷ்ணுரகசியத்திற் பேசப்பட்டிருந்தால் அத்துவித மெனக் கொள்வாராக்கும்.

### பூர்வபக்ஷம்.

"சிவத்திலே தம்முயிரைச் செலுத்திச் சரியா கிரியா யோகத்திற்றலைமை படைத்துத் திருமூல நாயனார் என்றுரைக்கும் சிவபத்த விலாசத்திலும்."

### சித்தாந்தம்.

இதில் சிவமும் உயிரும் சத்து என்பதற்கு என்ன ஆதார மிருக்கின்றது? இரு பொருளும் சத்தெனச் சிவபத்த விலாசங் கூறினதாய் இவரு மெடுத்துக் காண்பிக்க வில்லையே; துவிதாத் துவித விஷயத்தைப் பற்றியே சிவபத்த விலாசம் பேச வில்லையே. சிவபத்த விலாசம் கூறுவிடினும் பிரஸ்தாபத்தி லிருக்கும் திருமந்திரம் இது விஷயமாக என்ன சொல்லுகிறதென்றால்சிவனிடத்தில் சீவன் ஒடுங்கிச் சிவ மொன்றே நிற்கிறதென்றும் இரண்டென்ப தில்லை யென்றும் ஜீவன் கற்பனையென்றும் சொல்லுகிறது. இதற்குப்பிரமாணம் வருமாறு:—

திருமந்திரம் காரியகாரணோபாதி.

காரியமேழிற்கலக்கும்கடும்பசு
காரணமேழிற்கலக்கும்பரசிவன்
காரியகாரணங்கற்பனைசொற்பதப்
பாரறும்பாழில்பராபரத்தானே. (ரு)

ஷை கடுஞ்சுத்தசைவம்.

நானென்றுந்தானென்றும்நாடிநான்சாரவே
தானென்றுநானென்றிரண்டிலாத்தற்பதந்
தானென்றுநானென்றதத்துவநல்கலால்
தானென்றும்நானென்றுஞ்சாற்றகிலேனே. (௪)

ஷை உடலிற்பஞ்சபேதம்.

தானவனுகியதற்பதம். (கூ)

ஷை நின்மலாவத்தை.

தானவனாகும்சமாதிகைகூடினால். (௧௬)

தானவனாகியஞானத்தலைவனை. (௨௧)

ஷை முப்பதம்.

தொம்பதந்தற்பதம்தோன்றுமசிபதம்
நம்பியசீவன்பரஞ்சிவனாய்நிற்கும். (௫)

ஷை ஞானேதயம்.

நானென்றுந்தானென்றும்நாடினேனாடலும்
நானென்றுந்தானென்றிரண்டில்லை. (அ)

ஷை தோத்திரம்.

சிவன்முன்பலபலசீவனுமாகி
நவின்றானுலகுறுநம்பனுமாமே. (௩௦)

பூர்வபக்ஷம்.

"திருவாரூரிலே வன்மீக நாதர் 'தில்லைவாழந்தணர் தம் மடியார்க்கு மடியேன்' என்று அடியெடுத்துக் கொடுக்கச் சுந்தரமூர்த்தி நாயனாரால் அருளப்பட்ட திருத்தொண்டத் தொகையிலே அமைந்த 'நம்பிரான் திருமூல னடியார்க்கு மடியேன்' என்னுந் திருவாக்கினாலும்."

சித்தாந்தம்.

திருவாரூரிலே வன்மீக நாதர் அடி யெடுத்துக் கொடுத்தமையினால் அது துவித பக்க மாயிற்றுப் போலும். சிதம்பரம் நடராஜர் அடியெடுத்துக் கொடுத்திருந்தால் அத்துவித பக்கமாய் விடும் போலும். அதினும் சுந்தர மூர்த்தி சுவாமிகளுக்கு அடியெடுத்துக் கொடுத்தமைபற்றித் துவிதமாயிற்றுப்போலும்; மாணிக்கவாசக சுவாமிகளுக்கு அடியெடுத்துக் கொடுத்திருந்தால் அத்துவிதமாய் விடும் போலும். துவிதத்திற்கு எத்தகைய வலிமையைத் தேடுகிறார் பாருங்கள்.

பூர்வபக்ஷம்.

"குடிமன்னுசாத்தானூர்க்கோக்குலமேய்ப்போன்குரம்பைப்புக்கு
முடிமன்னு கூனற்பிறையாளன்றன்னைமுழுத்தமிழின்
படிமன்னுவேதத்தின்சொற்படியேபரவிட்டெனுச்சி
யடிமன்னவைத்தபிரான் மூலனாகின்றவங்கணனே.

என்று திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் அனுக்கிரகம் பெற்ற ஆதி சைவராகிய நம்பி யாண்டார் நம்பி யருளிய திருவந்தாதி யினாலும்."

சித்தாந்தம்.

என்ன வாதாரமிருக்கிற தென்றெண்ணி இச்செய்யுளைக் காட்டினாரோ அறியோம். இப்படியும் ஒரு சமய வாதி யிருப்பாரா? பிரமாணமற்ற மதவாதிகளுக்கு இதுதான் கதி. எடுத்த விஷயத்திற்கு வேண்டிய ஆதார மில்லா இப்படிப்பட்ட செய்யுளாற்றான் ஐயர் மதம் தாபிக்கப்படவேண்டுமாக்கும்!

## பூர்வபக்ஷம்.

"ஞான முதலிய வொரு நான் குண்மை தெள்ளு தீந்தமிழாற் கூறுந் திருமூலர்

எனவும்,

'ஊனுடம்பிற்பிறவிவிடந்தீர்ந்துலகத்தோருய்ய
ஞானமுதனான்குமலர்நற்றிருமந்திரமாலை
பான்மைமுறையோராண்டுக்கொன்றாகப்பரம்பொருளா
மேனவெயிறணிந்தாரையொன்றவன்றானெனவெடுத்து.

எனவும்,

ஆவடுதண்டுறையணைந்தங்கரும்பொருளையுறவணங்கி
மேவுவார்புறக்குடபான்மிக்குயர்ந்தவரசின்கீழ்த்
தேவிருக்கையமர்ந்தருளிச்சிவயோகத்தலைநின்று
பூவலருமிதயத்துப்பொருளோடும்புணர்ந்திருந்தார்.

எனவும்,

பித்துற்றமயலகன்றுபிறிதொருசார்புளதன்று
சித்தவிற்பங்களொந்துதெளிந்தசிவ்யோகத்தில்
வைத்தகருத்தனராகிவரம்பில்பெருமையிலிருந்தா
ரித்தகைமையளப்பரிதால்யாராலுமெனவுரைப்பார்.

எனவும், போதரும்

(உலகெலா முணர்ந் தோதற் கரியவன் என்று நடராஜ வள்ளலார் அடியெடுத்துக் கொடுக்கச் சேக்கிழார் நாயனார் பாடியருளிய) பெரிய புராணத்தினாலும்,

கயிலாயத் தொரு சித்தர் பொதியிற் சேர்வார் காவிரி சூழ் சாத்தனூர் கருதுமூலன், பயிலாநோயுடன் வீயத்துயர்நீடும் பசுக்களைக் கண்டவனுடலிற் பாய்ந்து போத, வயலாகப் பண்டை யுட லருளான் மேவி யாவடுதண் டுறை யாண்டுக்கொரு பாவாகக், குயிலாரு மரசடியி லிருந்து கூறிக் கோதிலா வடகயிலை குறுகினாரே.

என்று

'சிதம்பரத் தில்லைத் தீக்ஷிதருள் ஒருவராயும் சந்தானாசாரியர்களுள் ஒருவராயுமுள்ள உமாபதி சிவாசாரியரருளிய திருத்தொண்டர் புராணத்தினாலும்

'சக்கரவர்த்தி தவராச யோகியென்று மிக்க திருமூல னருள் மேவுநா ளெந்நாளோ'

என்று போற்றுந் தாயுமானசுவாமிகள் திருப்பாடற்றிரட்டிலும், சிவாகமங்களிலேயுள்ள சரியை கிரியை யோகஞான பாதப்பொருள்களை ஒன்பதுதந்திரங்களுள் அடக்கித் திருமந்திரமெனப் பெயரிய அதிரகசிய நுட்பார்த்தங் கொண்ட ஞானநூலை யருளினவர் ஏகான்மவாத மெனப்படும் மாயாவாதியாகாது சிவராச யோகியாராயுள்ளார் ஸ்ரீ மூலநாதரென வடமொழிச் சிவரகசிய சிவபத்த விலாசாதிகளை கூறப்படுந் திருமூல நாயனாரே யாம் என்பது வைதிக சைவராயினார்க் கெல்லா மொப்ப முடிந்த பக்ஷமன்றோ."

## சித்தாந்தம்.

இவ்வளவு பிரமாணங்கள் காட்டியும் அதில் அத்துவித விரோதமாகவும் துவித சாதகமாகவும் ஒரு வாக்கிய மாவது, ஒரு சொல்லா

வது, ஒரு எழுத் தாவது இல்லை. இவர் பிரமாணங் காட்டாது வெற்றுரையால் பேசியிருப்பின் துவிதத்திற்கு ஏதேனும் பிரமாணமுமிருக்குமெனை விசாரணை யில்லாதவர் நினைக்கக் கூடும். பிரமாணங் காட்டியும் அதில் இவர்க்கு அனுகூல மாக அணுவளவு மில்லாமையால் துவிதமதத்தில் சத்தில்லையெனக் கருதி, அம்மதம் சுருதியுக்தி அனுபவ பல மில்லாப் போலி யென நிச்சயித்துக் கொள்வார்கள். இதுதான் பலன் இவர் காட்டிய பிரமாணங்கட்கு. திருமூல நாயனாரைச் 'சக்கரவர்த்தி தவராஜ யோகி' எனத் தாயுமான சுவாமிகள் விதந்ததும் இவருடைய துவிதத்திற்குச் சாதகமாம். இத்தொடர்மொழியில் என்னென்ன மொழி துவித சாதகம்? என்னென்ன மொழி அத்துவித பாதகம்? இனி "வந்தான், போனான், உண்டான், உடுத்தான், உறங்கினான்" என்ற மொழிகளையும் தமக்குச் சாதகமென எடுத்துக் காண்பிப்பார் போலும். ஐயர் தாம் எழுதுவதில் "இன்னது குணம், இன்னது குற்றம், இன்னது குறைவு, இன்னது நிறைவு" என்று யோசிக்க அவர் புத்தி ஸ்திரமா யில்லை. கை கொண்டமட்டும் எழுதிவிடுகின்றார். அவர் எழுதுவது அவர்க்கே தெரியாது. புத்தி ஸ்திரப்பட்ட பிறகுதான், தாம் எழுதிய குற்ற மின்னதென விளங்கும்.

## வேதாகமஞானவிரோதம்.

'சிவாகமங்களிலே யுள்ள........ஞான நூலை அருளினவர்' என்றதால், சிவாகம ஞானம் இவர் பக்கத்ததென் றாகின்றது. ஆகவே, வேதத்திலே யுள்ள ஞான மிவர் பக்கத்த தன்றென் றாகின்றது. அங்ஙன மாயின் வைதிக சைவம், வைதிக சைவமென வேதத்தோடு சம்பந்தம் வைத்துக்கொள்வானேன்? சிவாகமபக்கமென்று கூறிய திருமந்திரமே அத்துவித பக்கமா யிருப்பதாலும்; சிவ ஞான போதம், தேவிகாலோத்தர முதலியனவும் அத்துவித பக்கமே யெனப் பன்முறை பிரமாணங் காட்டி யிருப்பதாலும், திருமூல நாயனார் சிவாகமத்தைக்கொண்டும் அத்துவிதத்தை நாட்டி யிருக்கின்றமையானும் ஐயர் வேத ஞானத்துக்கு விரோதியானதோடு ஆகம ஞானத்துக்கும் விரோதியானாரென்க.

## ஏகாத்துமவாதம் ஏகப்ர்ம்மவாதம்.

'ஏகான்மவாதம்' என்பது 'ஏகக்கடவுள் வாதம்' எனப்படுதலானும், ஏகக்கடவுளே ஏக சிவம், ஏகப்பிரமம் எனப்படுதலானும் திருமூலர் ஏக சிவமென வொப்பும் ஏகான்ம வாதியாம். இதை யொப்பாதவர் பல கடவுளென வொப்பும் அநேகேசுவர வாதியாம். இவ்விஷயம் 'சித்தாந்திகளும் ஏகாத்தும வாதிகளே' என்ற நூலில் விரிவாய்ப் பேசப்பட்டிருப்பதாலும், அதற் கிது காறும் மாயா வாத துவித தாந்திரிகர் எவரும் பதில் கூறாது மறைந் திருப்பதாலும், அவரில் இவரும் ஒருவராயிருப்பதாலும் அங்கு மறுத்த மறுப்பை

மீண்டும் இங்குப் பேசுவ தநாவசியகமென நிறுத்திவிட்டோ மென்க. திருமூலர் மாயை பொய்யென்றும், ஜீவன் கற்பனையென்றும், சிவம் ஒன்றே உண்மை யென்றும் கூறுகின்றமையானும், சாந்தோக்கிய உபநிஷத்தின் தத்துவ மசி வாக்கியத்தைக் கொண்டும் அத்துவித த்தைத் தாபித்தமையானும், இத்தகைய அத்துவித சிரேஷ்டரான திருமூலநாயனாரைப் பற்றிச் சிவரகசியம், சிவபத்த விலாசம், திருத் தொண்டர் புராணம் இவை கூறுகின்றமையானும் இது வேதவைதிக சைவராயினோர்க் கெல்லாம் ஒப்ப முடிந்த பக்ஷமாமென்க; வேதத் தைப் பசுநூல், விபசாரநூல், மயக்கநூல், உலக நூலென விகழும் வேத பாஹிய அவைதிக தாந்திரிக துவித மாயா வாதப் போலிச் சைவர்க்கு ஒப்ப முடிந்த பக்ஷ மன்று மென்க. இத்தகையோர் ஒரு போதும் வைதிக சைவராகார்! ஆகார்!! தாயுமானார் அத்துவிதியே யன்றித் துவிதி யன்றென 'மாயாவாத சைவசண்டமாருதம்' என் னும் நூலில் 20, 21, 22, 23, 24, 52, 53, 54, 71, 72, 73, 74, 75, 127, 128, 129, 130, 131, 132, 133, 134, 135, 182, 183, 184, 185 வது பக்கங்களில் விரிவாய்ப் பேசப்பட்டிருக்கிறது. இது காறும் காட்டிய பிரமாணங்களெல்லாம் அத்துவிதிகளுக்கே சாதக மாகவும், இவர் எடுத்த விஷயத்திற்கு அவை உதவியற்றும் போன மையின், இவர் ஆதாரமற்று அந்தரத்தில் ஊஞ்சலாடும் மதஸ்த ராகின்றார். "சும்மாவிருந்த தாரையை ஊதிக்கெடுத்தான் ஆண்டி" என்றவாறு வாதமற்றுச் சும்மாவிருக்கும் திருமந்திர நூலை யெமது நூலென்று சொல்லி, முடிவில் தமக்குச் சொந்த மல்ல வெனச் சொல்லுமாறு செய்து கொண்டார். இனியும் இவ்வாறே ஒவ்வொன் றையும் எடுத்து எமது நூல், எமது நூல் என்று சொல்லி வாதம் புரிந்து, வாதத்தீர்ப்பில் தமக்கேதுஞ் சொந்த மில்லையெனத் தீர்மா னித்துக் கொள்வாராக. ஐயர்க்கு ஏதுமே சொந்த மில்லையோவெ னின் சொந்த மென்பவை யுள்ளன. அவை சுருதி ஸ்மிருதி புராண இதிகாசாதி பதினான்கு வித்தைகளும், திருவாசக தேவார திருத் தொண்டர் புராண சிவஞானபோத முதலிய நூல்களும் நீங்கலாக, சிவஞானபோத துவிதவுரை, சிவஞானசித்தி, சிவப்பிரகாச முதலிய நூல்க ளுள்ளன. இத்தகைய இவரது சொந்த நூல்களி னின்று வாதம் புரிந்தால் இவர் என்றும் அப்பிரமாண வாதியாகமாட்டார். இவர் சிவரகசியத்தின் ஓரிடத்தைப் பிரமாணமாகக் காட்ட வந்தார். அது துவிதத்தைப் பற்றியாவது அத்துவிதத்தைப் பற்றியாவது பேசவந்த விடமல்ல; பத்திமான்களுடைய சரித்திரத்தைப் பற்றி மாத்திரம் பேசவந்த விடம். தத்துவத்தைப் பற்றிப் பேசிய இடம் வேறே யிருக்கின்றது. அதில் ஒன்று ஆறுவது அம்சம். அதுதான் ரிபுகீதை. அது துவிதத்தை மறுத்து அத்துவிதமே உண்மையெனக் கூறுகின்றது. அதில் சில செய்யுள்கள் வருமாறு:—

## மகா இதிகாசமாகிய சிவரகசியம் ஆறாம் அம்சம் ரிபுகீதை 28 ம் அத்தியாயம் மகாவாக்கியார்த்தம்.

மாயையெனுமுபாதியுறுமீசன்றனேமருவியதற்பதமுரைசெய்வாச்சியார்த்தம்
ஆயதனதவித்தையுறுஞ்சீவன்றனேயறைகின்றதுவம்பதமோர்வாச்சியார்த்தம்
ஏயமதாமுபாதியெலாமிழந்தபின்னரேகவிலக்கணமானவத்துத்தானே
தூயபதமிரண்டுக்குமிலட்சியார்த்தந்தொடர்புற்றவைக்கியமேயசிபதார்த்தம்.

தற்பதலட்சியமானபிரமரூபந்துவம்பதலட்சியமானநீயேயாவாய்
அற்பமுமேயிதிலையமமைவதில்லையகண்டசிவன்றன்னுணையறைந்ததுண்மை
சொற்பமிலாவகண்டபரிபூரணமானசுத்தமதாம்பரப்பிரமநீயேயென்று
செப்பியிடுங்குருபரனேகுருவாகின்றான்செப்பியவாறறிந்தவனேசீடனுனேன்

இன்னவிதமிருக்குமுதல்வேதாந்தத்திலிலங்கியவிந்நான்குமாகாவாக்கியத்தின், பின்னமிலாவைக்கியமாமகண்டார்த்தத்தைப்பேதமெனும்பிராந்தியெலாந்தீரும்வண்ணம், அன்னசிவனருளியவாறடைவாய்ச்சொன்னே மறைந்தபடியழுத்தமுறவப்யாசித்தே, கின்னுருவாய்நிலைபெற்றவகண்டார்த்தத்தைநிருமலமாய்நீயென்றுமனுபவிப்பாய். (ருச)

சுயமதுவாந்தத்தவமசியென்னும்வாக்கியம்சொல்லுமுபதேசமகாவாக்கியமாகும், இயலு மகம்பிரமாஸ்மியென்னும்வாக்ய மிலகுமநுபூதிமகாவாக்யமாம், மயன்மருவாப்பிரஞ்ஞானம் பிரமவாக்யம் மனனத்தினப்பியாச வாக்கியமாகும், அயமாத்மாபிரமமென வறையும்வாக்கியமதற்கெல்லாஞ் சம்மதமாம்வாக்யமாமே. (ருரு)

அனிசமகம்பிரமாஸ்மிவாக்கியத்தாலகண்டபரபாவனையேயப்யாசித்து,நனிமருவும்பாவனையாநாமரூபநாட்டமெலாநன்றாகநாசஞ்செய்து, துனிமருவுந்துவிதத்தின்றொடர்பேயின்றித்துகளற்றவகண்டார்த்தமனுபவத்தவ், வனியமிலாவகண்டார்த்தவடிவேயாவாயவ்வண்ணமாகுவதேயகண்டமோட்சம். (ருஎ)

இச்செய்யுள்களினுல் அத்துவிதமே உண்மையென்றுவதோடு, திருமூலரது மகாவாக்கியமும் சிவரகசிய வாக்கியமும் ஒருபொருள் கொண்டு முடிவனவாமென்க.

## ஓரினப்படுத்தியது நியாயமே.

பொய், மெய்யை யெப்படி மறைக்குமென்று கேட்ட கேள்விக்குக் கயிற்றரவு முதலிய உவமானங்கள் சொல்லி, உவமேயத்தில் பொய்யான மாயை மெய்யான பிரமத்தை மறைக்குமென்றதற்கு

### சூதசங்கிதை காலவளவை.

நீளவான்மாவினுண்மையையமறைத்துநிற்றலினுற்றமதென்றும்
வாளவிர்வித்தையென்னுஞானத்தைமறைத்தலினவித்தையேயென்றும்
கோளுறஞ்ஞானகாரணமாகிக்குலவலின்மோகமேயென்று
மாளுறுசத்துவிலட்சனமாகியமைதலினசத்தென்றும். (க0)

உலகுதித்திடற்குக்காரணமாகியுறைதலிற்காரணமென்று
மிலகுகாரியமாகியவுலகாகியிருக்கவுந்தெரிதரப்படாத
வலனுறுதலினவியத்தமேயென்றும்வகுப்பரம்மாயைக்குப்பெயர்க
ணிலவணிபெருமான்றன்வலியாற்கற்பித்ததிந்திரம்பியகாலம். (கக)

இச்செய்யுள்களையும், 'மரத்தை மறைத்தது மாமதயானை' என்ற திருமந்திரச் செய்யுளையும் 'அத்வைத சித்தாந்தி' காட்டியிருக்கின்றாரன்றோ? அதற்காக இவ்வையர் சொல்வதைப் பாருங்கள்.

"'மெய்யைப் பொய் மறைக்கும்' என்பதற்குப் பிரமாணம் இவையாமென்று சூதசங்கிதை கால அளவை உரைத்த அத்தியாயத்துப் பத்துப் பதினோராஞ் செய்யுள்களையும் வேதாந்த சூடாமணி அறுபதாஞ் செய்யுளையும் வரைந்து இவற்றோடு திருமந்திரத்துப் பராவஸ்தையிற் கண்ட

மரத்தைமறைத்ததுமாமதயானை
மரத்தின்மறைந்ததுமாமதயானை
பரத்தைமறைத்ததுபார்முதல்பூதம்
பரத்தின்மறைந்ததுபார்முதற்பூதமே.

என்னும் இருபத்திரண்டாம் திருப்பாட்டையும் மேலே கூறியவாறு பொருள் படுத்திச் சேர்த்து ஓரினப்படுத்தித் திருமூல நாயனார் ஈண்டுப் பிரயோகித்த பரையைச் சுட்டிய 'பரம்' என்னும் பதத்தைத் தம் பக்கத்துக்கு வேதாகம சாஸ்திர வாராய்ச்சி இல்லாமையால் இலக்கறியாது கவர்ந்தார்"

என்றார்.

இதற்குச் சமாதான முறைப்பாம். மெய்யாய பிரமத்தைப் பொய்யாய மாயை மறைக்குமென்று சூதசங்கிதை கூறியதாலும், அவ்வாறே வேதாந்த சூளாமணியுங் கூறியதாலும், இவ்விரண்டிற்கு மொக்கத் திருமந்திரமுங் கூறியதாலும் ஓரினப்படுத்திக் கூறினதாமென்க. 'பரம்' என்ற சொல்லுக்கு எவ்விதப் பொருள் கொள்ளினும் சிவனேயாமென முன்னரே கூறியிருக்கின்றோமாகலினானும், பரத்தை யருளெனக் கூறினும்

திருமந்திரம் பராவத்தை.

நின்றானருளும்பரமுமுன்னேயமு
மொன்றாய்மருவுமுருவுமுபாதியும். (உஎ)

இச்செய்யுளினால் அருளும் பரமும் ஒன்றாய் அதாவது குணகுணியா யிருத்தலினானும், பரத்தைத் தற்பத வாச்சியார்த்தமாகக் கொள்ளின் அதன் லட்சியார்த்தம் பிரமம் அலலது சிவனாய் முடிதலானும் சூதசங்கிதையும் திருமந்திரமும் ஓரினமாய் ஒரு பொருள் கொண்டு முடிவனவா மென்க.

## தேவாராதிகளும் அத்துவிதமுடிபே.

"திருமந்திரத்துப் பிறவிடங்களிலிருந்தும் தேவாரம் சிவஞான போதம் கந்தரலங்காரம் கந்தரனுபூதி முதலியவைகளி லிருந்தும் வேதாந்தியார் தம் பக்கத்துக்குப் பொருள் படுத்தி உதகரிக்கும்

உதாரணங்கள் அவர் விடுத்த விஷயத்துக்குப் பொருத்த முறுவன வோ அன்றோ என்பதனை மேலே சொல்லியவாறு வைதிக சைவ சித்தாந்தப் பொருள் கொண்டு நிறுத்து விஷயத்தின் உபக்கிர மோபசங்காரங்களினால் நிரூபணஞ் செய்து வாய்மை கடைப்பிடித் தல் நமது சைவசித்தாந்த நெறியினர்க்குக் கடனா மென்க"

என்று முடிவில் கூறினார்.

வேதாந்த சங்கை நிவாரணத் துள்ளும், மற்றும் பல துவித சைவ கண்டன நூல்களுள்ளும் பிரமாணமாகக் காட்டப்பட்ட திரு மந்திரம், தேவாரம், திருவாசகம், சிவஞானபோதம், கந்தரலங்காரம், கந்தரநுபூதி முதலிய நூல்கள் சுருதி ஸ்மிருதி புராண இதிகாசாதி ப் பெரும் பிரமாணங்கட்கு விரோத மில்லாது அத்துவித முடி பினையே கூறுகின்றமை யானும், முன் 19, 20, 25, 26, 37, 38 - வது பக்கங்களிற் காட்டிய திருமந்திரச் செய்யுள்களின்படி உபக் கிரம உபசங்காரமாய்ச் சிவ மொன்றே மிஞ்சுதலினானும், பரிபூரண சிவத்தின்கண் போலியாக வன்றி யதார்த்தமாய் ஒருபொருளு மிரா தென்பது யுக்தி அனுபவங்களுக்குமொத்த தாதலினானும், இதற்குச் சுருதியாதிப் பிரமாணங்களைப் பன் முறை காட்டி யிருக்கின்றமை யானும் தேவாராதி நூல்களும் அத்துவித பக்கமேயா மென்க. இவ ரது நிரூபணத்தை வேத பாஹ்ய துவித தாந்திரிக சைவத்தைக் கொண்டேனும் யுக்தி அனுபவங்களைக் கொண்டேனும் நிலை நிறுத் தாதிருக்க, 'வைதிக சைவ சித்தாந்தப் பொருள் கொண்டு நிறுத் தும் விஷயத்தின் உபக்கிரமோபசங்காரங்களினால் நிரூபணஞ் செ ய்து' எனப் பொய்ம் மொழி கூறுதல் பொய்யுடையார்க்கே யன்றி மெய்யுடையார்க்குத் தகுதி யாமோ? இவர் கடைப்பிடித்ததுபோல இவர் பக்கத்து மற்றவரையுங் கடைப்பிடிக்குமாறு சற்புத்தி புகல் கின்றார். "தாம்பிடித்த முயலுக்கு மூன்றே கால்" எனக் கொண்ட இவரது கடைப்பிடி மற்றவர்க்கு மிருக்குமாயின், அது மூக்கறை யன் கதைபோ லாகு மென்பதற் கையம் ஒரு சிறுது மின்றென்க.

## முடிவுரை.

இதுவரையில் செய்த வாதத்தால் திருமந்திரம் இவர்க்குரிய தன்றென் றும், அத்துவிதிகளுக்கே யுரியதென்றும் தீர்மானமானமையின் இனித் திரு மந்திர நூலைத் தமது நூலென மறந்துஞ் சொல்லாதிருப்பாராக. இவர் இவ் வாறே சுருதி ஸ்மிருதி புராணேதிகாசாதி வைதிக சித்தாந்தத்தை அடிக்கடி யெதிர்த்து, வீண் விவாதஞ் செய்து, ஒவ்வொன்றிலும் அபஜயத்திற் குள்ளாகி அவமானத்திற் கிலக்காகின்றார். இது மிகப் பரிதாபம்! இவ்வாறு செய்வது ஐயர்க் கழகன்று. இனியேனும் இவ்விழித் தீய தொழிலுக் குட்படாது வைதிகா விரோதமான நன்னெறியிற் புகுந்து வாதம் புரிந்து அவ்வாதத்திற் றேறிய நல்லன செய்து நன்மையினைப் பெற்று நலமாக வாழ்வாராக.